# சுவர்க்கத்தின் தலைவி ஃபாத்திமா (ரலி)

தொகுப்பாசிரியர்
வா. கமாலுத்தீன் ஆலிம்
பாண்டிச்சேரி

வெளியீடு
**ஸலாமத் பதிப்பகம்**
குர்ஆன் – இஸ்லாமிய நூல்கள்
பதிப்பாளர், விற்பனையாளர் & ஏற்றுமதியாளர்
95 (புதிய எண். 197), லிங்கிச் செட்டித் தெரு,
முதல் மாடி , சென்னை – 600 001.
044 - 252 11 981, 42167 320
டெலிபேக்ஸ் : 044-43517320

காணிக்கை
இந்நூலை மார்க்க மாமேதை ஷைகுல் மில்லத்
அல்லாமா அமானி ஹஜரத் அவர்களுக்குக்
காணிக்கை ஆக்குகிறேன்.

கிடைக்கும் இடங்கள் :

**ஸலாமத் பதிப்பகம்**
95, லிங்கிச் செட்டித் தெரு,
முதல் மாடி, சென்னை - 1.
☎ 044 25211981, 42167320

**ஸலாமத் புக் சென்டர்**
(மஸ்ஜிதே மஃமூர் வளாகம்)
168/3, அங்கப்ப நாயக்கன் தெரு,
மண்ணடி, சென்னை - 1.
☎ 044 5235 8274, 25211981

# என்னுரை

அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன். வஸ்ஸலாத்து, வஸ்ஸலாமு அலாகைரி கல்கிஹீ முஹம்மதின் வஆலிஹி- வ அஸ்ஹாபிஹீ அஜ்மஈன்.

பெண் இனத்தின் ஒளிவிளக்கு அன்னை பாத்திமா (ரலி) அவர்களின் தூய வாழ்க்கை, இஸ்லாமிய பெண்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். அவர்கள் நாணத்தின் மறுபதிப்பு! கற்பின் பெட்பினை உலகத்திற்கு உணர்த்தியவர்கள். வீரர் அலீ (ரலி) அவர்களின் அருந்துணைவியாவார்கள்.

வீரப்புதல்வர்களாம் இமாம்கள் ஹஸன் இமாம் ஹுஸைன் (ரலி) ஆகியோரின் அன்னையாவார்கள்.

பெண்கள் இப்படியும் வாழ முடியுமா என்று வினாக்குறி எழுப்பிடுவோருக்கு வியப்புக்குறியாக நின்று வாழ்ந்து காட்டியவர்கள்.

அந்தத் தூயபெண்மணி அகிலத்தின் அருட்கொடை அண்ணல் நபி (ஸல்) அவர்களின் ஈரல் குலைத் துண்டாவார்கள்.

அன்னையாரின் வாழ்க்கை வரலாற்றை பலரும் தம் கை வண்ணத்தால் அழகுறச் செய்துள்ளனர். அவர்களின் வரிசையில், எளியேனும் சேர்ந்துள்ளேன். நீண்டநாள் ஆசை! இன்று தான் பேரருளாளன் அல்லாஹ் நிறைவுபடுத்தித் தந்தான்.

அனைத்துப் புகழும் அவனுக்கே உரியன! இதில் உள்ள குறைகள் என் மறதியால் விளைந்தவை! குற்றங்கள்- குறைகள் மனிதனில் உள்ளவை! அதனை இந்நூலில் கண்டிடும் அறிஞர் பெருமக்கள் சுட்டிக்காட்டினால் திருத்திக் கொள்வேன். வஆகிரு தஃவானா அனில் ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்.

பாண்டிச்சேரி
12-7-93

எளிய ஊழியன்
வா. கமாலுத்தீன் ஆலிம்

# சான்றுரை

இருலோக இரட்சகர் அருள் நபி (ஸல்) அவர்கள் திரு நாவால் தம் அருமை மகளார் பாத்திமா (ரலி) அவர்கள் புகழப்பட்டார்கள் இவ்வாறு : பாத்திமா என்னில் நின்றும் உள்ளவர். எனவே யார் பாத்திமாவை மகிழ்விக்கிறாரோ அவர் என்னை மகிழ்வித்தவராவார். சொர்க்கத்தில் முதன் முதலாக என்னிடம் வருபவர் பாத்திமா ஆவார். இந்த சமுதாயத்திலே பாத்திமா இஸ்ரவேலர்களில் தோன்றிய மரியம் (அலை) அவர்களைப் போன்றே திகழ்கிறார்கள்.

திருநபியின் திருவாய் மொழியால் புகழப்பட்டவர்தாம் மாதர்குல மாணிக்கமாகத் திகழும் மன்னர் நன்னபியின் மருமகர் மறைபுலி அலீ (ரலி) அவர்களின் இல்லறத்துணைவியார் பாத்திமதுஜ்ஜஹறா (ரலி) அவர்கள்.

பெண்ணினத்தின் பொன்னாக பரிணமிக்கும் பாத்திமா அவர்களின் ஒப்புயவர்வற்ற சீரிய வரலாற்றினை தமிழில் பல ஆசிரியர்கள் எழுதி வெளியிட்டு பாராட்டை பெற்றுள்ளனர். அந்த வரிசையில் சுவர்க்கத்தலைவி அன்னை பாத்திமா (ரலி) என்ற நூலும் இடம் பெறுகிறது. இந்நூலை பன்னூல் ஆசிரியர் பாண்டிச்சேரி வா. கமாலுத்தீன் ஆலிம் அவர்கள் 30 தலைப்புகளில் பாத்திமா (ரலி) அவர்களின் வாழ்க்கை வரலாற்றினை சுவைபட எழுதியுள்ளார். இந்நூலை சென்னை அனஸ் புக் சென்டர் நிறுவனத்தினர் அழகாக அச்சிட்டு வெளியிடும் பாக்கியம் பெற்றுள்ளனர். இவர்கள் சமுதாயத்தினர்களால் பாராட்டத்தக்கவர்கள். இந்நூலை யாவரும் வாங்கிப்படித்து பயன்பெற வேண்டுமாய் முஸ்லிம் சகோதர சகோதரிகளை பணிவன்போடு கோருகிறேன். அல்லாஹ் யாவருக்கும் நல்லருள் புரிவானாக!

கோட்டக்குப்பம்

சமுதாய ஊழியன்
அப்துஸ்ஸமத் நத்வி

# பதிப்புரை

அல்ஹம்து லில்லாஹ்! வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹ்! வ ஆலிஹி வ அஸ்ஹாபிஹீ அஜ்மயீன்.

தங்களின் கரங்களில் தவழ்ந்துகொண்டுள்ள சுவர்க்கத்தின் தலைவி பாத்திமா (ரலி) எனும் இந்நூல் பன்னூலாசிரியர் வா.கமாலுத்தீன் ஆலிம் அவர்களால் தொகுக்கப்பட்டதாகும்.

அன்னை பாத்திமா (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களால் சுவனத்தின் தலைவி என நன்மாராயம் அளிக்கப்பட்டவர்களாகும். அவர்களின் 26ஆண்டுக்கால வாழ்க்கை இஸ்லாமியர்களுக்கு குறிப்பாக இஸ்லாமியப் பெண்மணிகளுக்கு முன் மாதிரியாகவும் பின்பற்றத் தக்கதாகவும் அமைந்துள்ளது என்பது அனைவரும் அறிந்த விஷயமே!

அன்னை பாத்திமா (ரலி) அவர்ககளின் நற்குணங்கள், தயாளம், மார்க்கப்பற்று, கணவனுக்கு வழிபடுதல், உற்றாரை ஆதரித்தல், இறைவழிபாடு, எளிமை, பொறுமை போன்ற விபரங்களை எளிய நடையில் தெளிந்த நீரோடையென ஆசிரியர் அவர்கள் தொகுத்துத் தந்துள்ளார்கள்.

நூலாசிரியர் அவர்களுக்கும், இந்நூலுக்கு சான்றுரை வழங்கிய பெருந்தகை மௌலானா மௌலவி அப்துஸ்ஸமத் நத்வி ஹஜ்ரத் சிப்லா அவர்களுக்கும், இந்நூலை சரிபார்த்து அச்சிட்டு வழங்கிய வடகரை மௌலானா மௌலவி என்.எம். ஹஸன் முஹம்மத் பாகவீ (இமாம், தென்னூர் ஹைரோடு பள்ளிவாசல், திருச்சிராப்பள்ளி-17) அவர்களுக்கும் எங்கள் நன்றியை காணிக்கையாக்குகின்றோம்.

அன்னை பாத்திமாவின் நற்குண ஒழுக்கங்களை நம் குடும்பத்தினர் அனைவரும் பின்பற்றி நடந்திட வல்ல நாயன் அல்லாஹ் நல்லருள் புரிவானாக! ஆமீன்.

**அனஸ் புக் சென்டர்**
**சென்னை.**

# பொருளடக்கம்

# 1. அன்னையின் பிறப்பு

அல்லாஹ்வின் திருத்தூதர் அகிலத்தின் பேரொளி, அண்ணல் நபி (ஸல்) அவர்களின் முப்பத்தி ஆறாவது வயதில் அதாவது அண்ணலாருக்கு நபிப்பட்டம் கிடைப்பதற்கு ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர் ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் பிறந்தார்கள். அவ்வாண்டில்தான் சிதைந்து போயிருந்த கஃபாவைக் குரைஷிகள் செப்பனிட்டுக் கொண்டிருந்தனர்.

- மதாரிஜுந்நுபுவ்வத்

## அன்னை பாத்திமா (ரலி) வின் சிறப்புகள்

"ஆண்களில் முழுமை பெற்றவர்கள் பலர் உள்ளனர். எனினும் பெண்களில் மரியம் (அலை) , ஃபிர்அவ்னின் மனைவி ஆஸியா, கதீஜா (ரலி), பாத்திமா (ரலி) ஆகியோரைத் தவிர எவரும் முழுமை பெறவில்லை" என்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

- நூருல் அப்ஸார்

மறுமை நாளில் மக்களைப் பார்த்து பாத்திமா (ரலி) அவர்கள் போகின்றார்கள்; எனவே எல்லோரும் கண்களை மூடிக் கொள்ளுங்கள் எனக் கூறப்படும். பின்னர் பாத்திமா (ரலி) அவர்கள் தங்கள் மீது இரண்டு பச்சைப் போர்வையை அணிந்தவர்களாகச் செல்வார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

- தலாயிந்நுபுவ்வத் -நூருல் அப்ஸார்

ஆம் ; இவ்வுலக வாழ்க்கையில் அன்னையார் எந்த அந்நிய ஆடவனின் கண்களிலும் படாமல் தங்களை மறைத்து வாழ்ந்து வந்தது போன்றே மறுவுலக வாழ்க்கையிலும், தம்மைப் பிற ஆடவர் காணாதவாறு தங்களை மறைத்தே செல்வார்கள்.

## நரக நெருப்பை விட்டும் பாதுகாக்கப்பட்டவர்கள்

"பாத்திமா (ரலி) தமது மறைவிடத்தை (ஹராமை விட்டும்) காத்துக் கொண்டதுபோல அல்லாஹ் தஆலா அவர்களையும் அவர்களின் பிள்ளைகளையும் நரக நெருப்பை விட்டும்

பாதுகாத்துக் கொண்டான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். - நூருல் அப்ஸார்

"நான் ஏழாம் வானம் வரைச் சென்றேன். அங்கு நோக்கினேன். மரியம் அவர்களுக்கும் மூஸா (அலை) அவர்களின் அன்னைக்கும் ஃபிர் அவ்னுடைய மனைவி ஆசியா அவர்களுக்கும் கதீஜா (ரலி) அவர்களுக்கும் மாணிக்கத்தால் ஆன மாளிகைகள் அமைக்கப்பட்டிருந்தன. மேலும் பாத்திமா (ரலி) அவர்களுக்காக முத்துக்கள் பதிக்கப்பெற்ற சிவப்பு வர்ணப் பவளங்களால் ஆன எழுபது மாளிகைகள் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றின் வாயிற்கதவுகளும் சிம்மாசனங்களும் ஒரே வகையான மரத்தினால் செய்யப்பட்டிருந்தன" என்று மாநபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். - நூருல் அப்ஸார்

என்னிடம் கவர்க்கத்தில் நுழைபவர்களில் முதன்மையானவர் பாத்திமா (ரலி)ஆவார். இந்தச் சமுதாயத்தில் (முஸ்லிம்களில்) அவர்களுக்கு உதாரணம் பனீ இஸ்ராயீல் சமுதாயத்தவர்களில் மரியம் அவர்களைப் போன்றாவார்" என்று நபி (ஸல்) அவர்கள் நவின்றனர்.

உம்மு சல்மா (ரலி) அவர்கள் கூறினார்கள்: ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் என் வீட்டில் தங்களது விரிப்பில் அமர்ந்திருந்தார்கள். மேலும் கைபர் நாட்டின் கம்பளி ஒன்றை தம் மீது போர்த்தியிருந்தனர். அது சமயம் பாத்திமா (ரலி) அவர்கள் ஒரு பாத்திரத்தில் 'கஜீரா' என்னும் இறைச்சியால் தயாரிக்கப்பட்ட திக்கடியைக்கொண்டு வந்தார்கள்.

அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் பாத்திமாவை நோக்கி "உங்கள் கணவர் அலீ (ரலி) அவர்களையும் குழந்தைகள் ஹஸன், ஹுஸைன் இருவரையும் அழைத்துவாருங்கள்" எனக்கூற, பாத்திமா (ரலி) அவர்கள் அம்மூவரையும் அழைத்து வந்தனர். அனைவரும் உண்டுகொண்டிருந்த பொழுது நபி (ஸல்) அவர்கள் மீது "(நபியுடைய) வீட்டினரே! உங்களை விட்டுச் சகல அசுத்தங்களையும் நீக்கி, உங்களை முற்றிலும் பரிசுத்தமாக்கிவிடவே அல்லாஹ் விரும்புகின்றான்."

- அத் : 33 வச : 33

என்னும் திருவசனம் இறங்கிற்று. அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் தங்கள் மீது போர்த்தியிருந்த கம்பளிப்போர்வையால் ஹலரத் அலீ (ரலி), ஹலரத் பாத்திமா (ரலி), ஹலரத் ஹஸன், ஹலாத் ஹுஸைன் (ரலி) இவர்களைப் போர்த்தி, தங்கள் கையைப் போர்வையைவிட்டு வெளியாக்கி இறைவா! இவர்கள் என் குடும்பத்தார்கள்; மேலும் எனக்குச் சொந்தமானவர்கள்; இவர்களைவிட்டும் அசுத்தத்தை நீக்கி, இவர்களைத் தூய்மைப்படுத்துவாயாக! என்று மூன்று முறை துஆச் செய்தார்கள்.

(மேலும்) ஹலரத் உம்முசல்மா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: நானும் அப்போர்வைக்குள் என் தலையை நுழைத்துக்கொண்டு 'அல்லாஹ்வின் தூதரே! நானும் தங்களுடன் இருக்கின்றேன்' எனச் சொன்னேன். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் என்னை விட்டும் போர்வையை இழுத்து விட்டு 'ஓ உம்முசல்மா ! நீர் நபியின் மனைவி; நீர் நலவின் பேரில் உள்ளீர்' எனக் கூறினார்.

- துர்ரமன்சூர்

ஹுதைபா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்: ஒரு நாள் என் அன்னை என்னை நோக்கி, "நீ நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து எத்தனை நாட்கள் ஆகின்றன?" எனக் கேட்டார்கள் நான் "அவர்களைச்ச சந்தித்து நீண்ட நாட்கள் ஆகின்றன என்றேன். உடனே என் அன்னை என்னை ஏசினார்கள். நான் நபி (ஸல்) அவர்களைக் காண்பதற்கு என்னை விடுங்கள். நான் அவர்களைச் சந்தித்து அவர்களுடன் மஃரிபும் இஷாவும் தொழுதுவிட்டு எனக்கும் உங்களுக்கும் பிழை பொறுக்குமாறு துஆ இறைஞ்ச கேட்டுக்கொண்டு வருகிறேன் என்று கூறி அன்னையாரின் அனுமதி பெற்றுச் சென்று நபி (ஸல்) அவர்களுடன் மஃரிபும் இஷாவும் தொழுதேன்.

அவர்கள் இஷா தொழுதுவிட்டு தங்கள் இல்லம் செல்ல ஆயத்தமானார்கள். நானும் அவர்களைப் பின்தொடர்ந்தேன். வழியில் ஒருவர் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து அவர்களுடன் சைகை மூலம் ஏதோ பேசினார்; பின்னர் மறைந்துவிட்டார்.

நபி (ஸல்) அவர்கள் இல்லம் நோக்கி நடக்கலானார்கள். நானும் அவர்கள் பின்னாலேயே சென்றேன். என் காலடி ஓசைக்கேட்டு 'யார் ஹுதைஃபாவா?' எனக் கேட்டார்கள். அதற்கு யான், 'ஆம்; யாரசூலல்லாஹ்!' என்றேன். பின்னர், அல்லாஹு தஆலா உம்முடைய உம் அன்னையாருடைய பிழைகளைப் பொறுத்தருள்வான். என்னிடம் உம்முடைய தேவை என்ன? எனக் கேட்டுவிட்டு, இப்பொபது ஒருவர் வழியில் வந்து என்னைச் சந்தித்தாரே அவரைப் பார்த்தீரா?' என்று வினவினார்கள்.

ஆம், பார்த்தேன் எனக் கூறினேன. அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் "அவர் ஒரு வானவர். அவர் என்றைக்கும் பூமிக்கு வந்ததில்லை. அவர் எனக்கு ஸலாம் கூறிவிட்டு பாத்திமா சுவர்க்கப் பெண்களுக்குத் தலைவியாவார் என்றும், ஹஸனும் ஹுஸைனும் சுவர்க்க இளைஞர்களுக்குத் தலைவர்கள் ஆவார்கள் என்றும் நன்மாராயம் கூறவே அல்லாஹ்வின் அனுமதிகொண்டு வந்திருந்தார்" என்று திருவுளமானார்கள்.

- ரவ்ளத்துல் அஹ்பாப்

பாத்திமா (ரலி)வின் சினம்; அல்லாஹ்வின் சினமாகும். அவரின் மகிழ்ச்சி அல்லாஹ்வின் மகிழ்ச்சியாகும்.

ரவ்ளதுல் அஹ்பாப்

ஆம்; எவர் அன்னை பாத்திமா (ரலி) அவர்களைக் கோபம் கொள்ளச் செய்வாரோ அவரை அல்லாஹ் கோபிக்கிறான்; எவர் அவர்களை மகிழ்ச்சியடையச் செய்கின்றாரோ அல்லாஹ்வும் அவரின் மீது மகிழ்ச்சிகொள்கிறான். அன்னையவர்களைத் திருப்திபடுத்தினால் அல்லாஹ்வின் பொருத்தத்தைப் பெற்றிடலாம் என்பதே இந்த ஹதீஸின் கருத்தாகும்.

ஹலரத் உமர் (ரலி) அவர்கள் அன்னை பாத்திமா (ரலி) அவர்களிடம் "யா பாத்திமா! நபி (ஸல்) அவர்களுக்குப் பிறகு எனக்கு மிகவும் அன்பிற்குரியவராகத் தங்களைத் தவிர வேறு எவரையும் பெற்றுக் கொள்ளவில்லை" என்றார்கள்.

- மதாரிஜுந்நுபுவ்வத்

அபூசயீதுல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்; 'மஹ்தீ (அலை) அவர்கள் என்னுடைய வழித்தோன்றலர் (பாத்திமாவின் வழி மரபில்) களில் பிறப்பார்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

- மிஷ்காத் ஷரீஃப்

மேலும், ஹலரத் சய்யிதுனா, குத்புல், அக்தாப், கவ்துஸ்ஸகலைன், ஷைகு முஹ்யித்தீன், அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் ஹலரத் பாத்திமா (ரலி) அவர்களின் பிள்ளை வழியில் உள்ளவர்கள் ஆவார்கள். இவர்கள் போன்றே எத்தனையோ வலிமார்கள் அக்தாப்கள் பாத்திமா (ரலி) அவர்களின் வழிவந்தவர்களே என்பது நினைவு கூரத்தக்கதாகும்.

"உலகப் பெண்களில் இம்ரானின் மகளார் மர்யமும், குவைலிதின் மகள் கதீஜாவும், முஹம்மதுடைய மகள் பாத்திமாவும், மஜாஹிமுடைய மகளும் பிர்அவ்னுடைய மனைவியுமான ஆஸியாவும் மேலானவர்கள் ஆவர்" என்று நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்.

- ஜாமிஉஸ்ஸகீர்

## 2. பாத்திமா (ரலி) வின் சிறப்புப் பெயர்கள்

ஜுர்கானீ என்னும் நூலில் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் வாயிலாக அறிவிக்கப்பட்டுள்ளது : பாத்திமா என்னும் சொல்லுக்கு 'விடுதலைப் பெற்ற பெண்' என்று பொருள்.

நபி (ஸல்) அவர்களின் மகளார் பாத்திமா (ரலி) அவர்களுக்கு பாத்திமா என்று ஏன் பெயர் வைக்கப்பட்டதென்றால், அவர்களையும், அவர்களின் பிள்ளைகளையும் அல்லாஹ் தஆலா நரகத்தை விட்டும் விடுதலை பெற்றவர்களாக்கினான்.

மேலும், கஸ்ஸானி என்பவர்கள் மூலம் அறிவிக்கப்பட்டுள்ளது. ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் மீது அன்பு கொண்டவர்களையும் அல்லாஹு தஆலா நரக நெருப்பை விட்டும் விடுதலைச் செய்வதன் காரணத்தால்

பாத்திமா என்னும் பெயர் வைக்கப்பட்டது. இந்த ஹதீஸின் மூலம் பாத்திமா (ரலி) அவர்களின் மீது அன்பு வைப்பவர்களுக்கு பஷாரத் – நன்மாராயம் உண்டாகியிருக்கிறது.

- ஜர்கானி மவாஹறுபுல்லதுனிய்யா

**பதூல்**

ஹலரத் பாத்திமா (ரலி) அவர்களின் பெயர்களில் 'பதூல்' என்னும் பெயரும் உண்டு. இச்சொல்லுக்குத் 'தனித்திருக்கும் பெண்' என்று பொருள்படும். ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் மற்ற பெண்களை விடச் சிறப்பிலும் தீனிலும் குலத்திலும் தனித்தன்மையுடையவர்களாயும் உயர்ந்தவர்களாயும் இருந்தமையால் அவர்களை பதூல் எனக் கூறப்பட்டது. அடுத்து அவர்கள் உலகத் தொடர்புகளை விட்டு நீங்கி அல்லாஹ்வின் அளவிலேயே சார்ந்தவர்களாக இருந்தால் 'பதூல்' எனவும் அழைக்கப்பெற்றார்கள்.

- மவாஹிபுல்லதுனிய்யா –வமதாரிஜுந்நுபுவ்வத்

**ஜஹ்ராஉ**

'ஜஹ்ராஉ' என்பது அவர்களின் சிறப்புப் பெயர்களில் ஒன்றுதான். அதன் பொருள் 'தூய்மையானபெண்' என்பதாகும். ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் மாதவிடாய் உதிரத்தையும், பேறு கால உதிர ஓட்டத்தையும் காணாதவர்களாயிருந்தார்கள். இன்னும் அவர்கள் குழந்தைப்பெற்றாலும் உடனே தூய்மை பெற்றுவிடுவார்கள்.

மேலும் நேரம் தவறாமல் தொழுகையும் நிறைவேற்றி விடுவார்கள். எனவே, அவர்களுக்கு 'ஜஹ்றா' என்னும் சிறப்புப் பெயர் வழங்கலாயிற்று. நஸாயீ என்னும் ஹதீஸ் நூலில் அறிவிக்கப்பட்டுள்ளது. "எனது மகள் பாத்திமா (ரலி) அவர்கள் மனித இன (ப்பெண்) குலத்தவருள் 'ஹூருல்ஈன்' ஆவார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மேலும் ஹலரத் பாத்திமா (ரலி) அவர்களுக்கு முபாரகா தாஹிரா, ஜாகியா, ராளியா, மர்ளிய்யா என்னும் சிறப்புப் பெயர்களும் உள்ளன.

- நூருல் அக்பார்

# 3. அன்னையாரின் வணக்கவழிபாடுகள்

ஹலரத் ஹஸன் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள் : என்னுடைய அன்னை பாத்திமா (ரலி) அவர்கள் இரவில் தொழ ஆரம்பித்தால் சுப்ஹுவரைத் தொழுதுகொண்டிருக்கக் கண்டேன். வீட்டிலுள்ள பள்ளியில் (தொழுகை அறையில்) அவர்கள் வணக்கத்தில் ஈடுபட்டிருப்பார்கள். நான் கவனித்துக் கொண்டேயிருந்தேன். அவர்கள் முஃமின்களான ஆண் பெண்களுக்கே அதிகமாக துஆச் செய்து கொண்டிருந்தார்கள் ; தங்களுக்காக அவர்கள் ஒன்றும் துஆச் செய்யவில்லை. அப்பொழுது நான் அவர்களிடம் "தாயே! உங்களுக்காக யாதொரு துஆவும் செய்து கொள்ளவில்லையே!" என்று கேட்டேன். அதற்கவர்கள் "என் மகனே! அடுத்த வீட்டாரைக் கவனித்த பின்னரே தன் வீட்டைக் கவனிக்க வேண்டும்" என்றனர். - மதாரிஜுந்நுபுவ்வத்

என்னே! அன்னையின் திருஉள்ளம்! உயர் உள்ளம்! இவர்கள் போல் உண்டோ வையகத்தில் பெண்கள்?

ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் ஸலரத் பாத்திமா (ரலி) அவர்களின் இல்லம் வந்தனர். அது சமயம் பாத்திமா (ரலி) அவர்கள் சலிப்புற்றவர்களாய் அழுதுகொண்டிருப்பதைக் கண்டனர். அவர்களை நோக்கி, 'ஏன் கவலையுடன் இருக்கிறீர்?' எனக் கேட்டனர். அதற்கு அன்னை பாத்திமா (ரலி) அவர்கள் 'நான் குறை கூறுவதாக எண்ணவேண்டாம். செய்தியைச் சொல்கிறேன். அதாவது எங்கள் வீட்டில் மூன்று நாட்களாக உணவிற்கு வழியில்லை. ஹஸனும் ஹுஸைனும் பொறுக்க முடியாமல் பசிக்கொடுமையால் அழுது கொண்டிருந்தனர். அவர்கள் அழுவதைக்கண்டு எனக்கும் அழுகை வந்து விட்டது. அலி (ரலி) அவர்களும் அழுதனர். இவ்விஷயத்தைத் தங்களுக்கு அறிவிக்காமல் மறைத்துவிட்டோம். ஆனால் இன்று ஹஸனும், ஹுஸைனும் ஒரு வார்த்தைக் கூறினர். அதாவது "எங்களைப் போல் எந்தப் பிள்ளைகள் பசித்திருப்பார்கள்?" இம்மொழிகேட்டு எனக்குப் பொறுத்துக்கொள்ள முடியாத அளவிற்கு ஆகிவிட்டது.

என் தந்தையே! அல்லாஹ்வின் அடிமை, அல்லாஹ்விடம் துஆ, இறைஞ்சும் பொழுது அழுகையின்றி துணிவுடன் கேட்பது குற்றமா? எனக் கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹ் தனது அடியார்களின் அழுகுரலை மிகுதியாக்காது சலிப்புக்கொள்ளாது. துஆ இறைஞ்சுவதையே மிக விரும்புகின்றான்" என்றார்கள்.

உடனே பாத்திமா (ரலி) அவர்கள் எழுந்து குளித்து விட்டு, வீட்டின் ஒரு மூலையில் போய் நின்று தொழுது முடித்துவிட்டு அல்லாஹ்விடம் இரு கைகளை ஏந்தியவர்களாக அழுதவாறு துஆ இறைஞ்சினார்கள்.

"யாஅல்லாஹ்! பெண்களுக்கு நபிமார்கள் போன்று, பொறுமையும், வலிமையும் இல்லை என்பதை நீ அறிவாய்! உனக்கு என் தந்தையுடன் ஏதும் இரகசியம் இருக்கலாம். ஆனால், எனக்கு அந்த இரகசியத்தில் பொறுமை இல்லை. எனக்கு (த் துன்பங்களைப் பொறுத்துக்கொள்ளும்) வலிமையைத் தந்தருள்வாயாக! அல்லது அந்த பலாயில் இருந்து நலத்தைக் கொடு! என்று கேட்டவர்களாக மூர்ச்சித்து விழுந்துவிட்டார்கள். இந்நிலையில் நபி (ஸல்) அவர்களிடம் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் வருகை தந்து அல்லாஹ்வின் தூதரே! எழுந்திருங்கள் என்றனர். நபி (ஸல்) அவர்கள் ஏன் என்று வினவினார்கள். அதற்கு ஜிப்ரயீல் (அலை) அவர்கள் பாத்திமா (ரலி) அவர்கள் வானவர்களை அழவைத்து விட்டார்கள். தாங்கள் சென்று மகளைப் பாருங்கள் என்றார்கள்.

உடனே நபி (ஸல்) அவர்கள் பாத்திமா (ரலி) மூர்ச்சித்துக் கிடப்பதைக்கண்டு அவர்களின் தலையைத் தூக்கித தங்கள் தொடைமீது வைத்தார்கள். ஹஸரத் பாத்திமா (ரலி) அவர்கள் உணர்வுபெற்று எழுந்து வெட்கத்தால் தம் தலையைத் தாழ்த்திக்கொண்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் பாத்திமா (ரலி) அவர்களைப் பார்த்து, 'நஹ்னு கஸம்னா' என்னும் திருவசனத்தை ஓதுங்கள்; அல்லாஹ் உங்கள் துன்பங்களையெல்லாம் நீக்கி இலேசாக்கி வைப்பான் என்று கூறினார்கள். ஏனென்றால் அல்லாஹ்

துஆலா "கஸ்ஸாமுல் அவ்வல்" ஆதியிலே 'ரிஸ்க்கை பங்கு வைத்தவன் ஆவான் என்பதை அறியுங்கள் எனக் கூறிய பின்னர் தங்கள் முபாரகான கையை பாத்திமா (ரலி) வின் தலையில் வைத்து அல்லாஹ்வே இவர்களைப் பசியை விட்டும் காத்தருள்வாயாக!" என துஆ இறைஞ்சினார்கள். பாத்திமா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள். அதன்பின்னர் ஒருபொழுதும் என் உள்ளத்தில் பசியின் துன்பம்பற்றிய எண்ணம் எழவேயில்லை.

- ரவ்ளத்துல் அஹ்பாப்

அன்பர்களே ! இஸ்லாமியச் சகோதரிகளே! சற்று சிந்தித்துப்பாருங்கள். மேற்கூறிய அறிவிப்பின் மூலம் ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் எந்தளவிற்கு நெருக்கடியான வாழ்க்கையினை மேற்கொண்டிருந்தார்கள் என்பது நமக்குத் தெரியவரும்.

இத்துணை இன்னல்களுக்கு இடையேயும் அல்லாஹ்வை வணங்குவதில் யாதொரு குறையும் செய்யவில்லை. ஆனால் இன்றோ! கைசேதம்! நல்ல நிலையிருக்கும் வளவாழ்வு வாழ்ந்து கொண்டிருந்தும் பர்ளான தொழுகைகளைக் கூட நம்பெண்மணிகள் தொழாது விட்டு விடுகின்றனர். இது எவ்வளவு பெரிய வேதனை!

இன்றைய பாத்திமாக்கள் அவர்களுக்காக பாத்திஹாக்கள் ஓதுகின்றார்கள்; திருமணத்தில் அலீ (ரலி) அவர்களின் பெயரையும் பாத்திமா (ரலி) அவர்களின் பெயரையும் துஆவில் கூறிடும் போது பெண்ணின் கழுத்தில் இஸ்லாத்தில் இல்லாத தாலியைக் கட்டுகின்றார்கள். ஆனால் அந்த பாத்திமா (ரலி) அவர்களிடமிருந்த தொழுகை, நல்லொழுக்கம், நற்பண்புகள் இவர்களிடம் கடுகளவும் இல்லாமல் போய் விட்டதே!

தாலி கட்டுவதற்கு மட்டுமே பாத்திமா இவர்களுக்குத் தேவை போலும்! அல்லாஹ்தான் நம் சகோதரிகளுக்கு நேர்வழி காட்டி அருளவேண்டும்.

# 4. அன்னையைப் பெற்ற அன்னை

அன்னை பாத்திமா நாயகியாரின் தாயாரின் பெயர் கதீஜத்துல்குப்ரா. அன்னை கதீஜா (ரலி) அவர்களின் தந்தையின் பெயர் குவைலிது. குவைலிதுவின் தந்தையின் பெயர் அஸது. அஸதுவின் தந்தையின் பெயர். அப்துல் உஸ்ஸா, இவர்களின் தந்தையின் பெயர் குஸ்ஸா. இவர்களின் தந்தையின் பெயர் கிலாபு என்பதாகும். நபி (ஸல்) அவர்களின் தலைமுறையும் கதீஜா (ரலி)யின் தலைமுறையும் அதே குஸய்யி-யில் இணைகின்றது.

ஹலரத் கதீஜா (ரலி) அவர்களின் தாயார் பாத்திமா பின்த்து ஜாயிதா, ஹலரத் கதீஜத்துல்குப்ராவுக்கும், நபி (ஸல்) அவர்களுக்குமிடையே திருமணம் நிகழ்வதற்கு முன்னரே, அபூஹாலா என்பவரையும், அவர் இறந்த பின்னர் 'அதீக்' என்பவரையும் மணந்திருந்து அவர் இறந்த பின்னர் விதவைப் பெண்ணாகவேயிருந்து வந்தனர்.

அபூஹாலாவின் மூலம் கதீஜா (ரலி) அவர்களுக்கு 'ஹிந்த்' என்றும் 'ஹாலா' என்றும் இரு ஆண்மக்கள் பிறந்தனர். அதீக் என்பவர் மூலம் 'ஹிந்தா' என்ற ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதீக் இறந்த பின்னர், கதீஜா நாயகி வேறு திருமணம் செய்யாதிருந்தனர். அது சமயம் ஒரு நாள் தம் கனவில் வீட்டில் சூரியன் உதயமாகி மக்காவிலுள்ள இல்லங்கள் யாவும் ஒளிபெற்றுத் திகழ்வது போல் கண்டு இதனைத் தம் சிறிய தந்தையின் மகன் வரக்க துப்னு நவ்ஃபல் என்பவரிடம் சென்று கூறிட அவர் 'உனக்கும் இறுதிகால நபிக்குமிடையே திருமணம் நிகழும்' என்று கனவிற்கு விளக்கம் கூறினார்.

அக்காலத்தில் ஹலரத் கதீஜா (ரலி) அவர்களின் வாழ்க்கை வணிகமாக இருந்து வந்தது. தங்கள் சரக்குகளை அன்றைய வணிகச் சந்தையாகத் திகழ்ந்து வந்த ஷாம் நாட்டிற்கு அனுப்பிக் கொண்டிருந்தார்கள்.

இந்நிலையில் ஒருமுறை மிகுதியான சரக்குகளை ஷாம் நாட்டிற்கு அனுப்பிட எண்ணியபொழுது தகுதியான, நம்பிக்கையான மனிதர்கள் கிடைப்பது கடினமாகி யிருந்தது.

அது சமயம் நபி (ஸல்) அவர்களைப் பற்றிய நற்செய்தி மக்களிடையே பரவியிருந்தது. அவர்களின் நம்பிக்கை, நாணயம், அமானத்தைப் பாதுகாத்திடும் அரிய பண்புகள் யாவும் சீமாட்டி கதீஜா நாயகிக்கு தெரிய வந்தது.

கதீஜா நாயகி அவர்கள் தூது அனுப்பி தங்கள் சரக்குகளை ஷாமிற்குக் கொண்டு சென்றால் மற்றவர்களைவிட இருபங்கு இலாபங்கள் தருவேன் என்று நபி (ஸல்) அவர்களுக்குச் சொல்லியனுப்பினார்கள். நபி (ஸல்) அவர்கள் அபூ தாலிப் அவர்களுடன் கலந்தாய்ந்து பின்னர் கதீஜா நாயகியின் அடிமை மைஸரா என்பவருடன் சரக்குகளைப் பெற்றுக் கொண்டு ஷாம் நாட்டிற்குப் பயணமானார்கள்.

அது சமயம் வழியில் நபி (ஸல்) அவர்களுக்குப் பல்வேறு அற்புதங்கள் நிகழ்ந்தன. இடையில், நஸ்தூர் என்னும் சந்நியாசி. அவர் இஞ்சீல் வேதத்தில் புலமை பெற்றவர். அவர் தமது வேதமாகிய இஞ்சீலில் முன்னறிவிப்புச் செய்யப்பட்டிருந்த நபிக்குரிய அடையாளங்களை நபி (ஸல்) அவர்களிடம் கண்டு, அவர்களை மிகவும் கண்ணியப்படுத்தினார்.

இந்நிலையில் வியாபாரத்தில் இரட்டிப்பான ஆதாயமும் கிடைத்தன. வியாபாரம் முடிந்து, வணிகக்குழு மக்காவிற்குப் பயணத்தை மேற்கொண்டது. நபி (ஸல்) அவர்களும் ஒட்டகையின்மீது ஏறினார்கள். அது சமயம், இரண்டு பறவைகள் நபிகளாருக்கு நிழல் தந்தன. வணிகக்குழு மக்காவிற்கு அருகே வந்து கொண்டிருந்தபொழுது, ஹலரத் கதீஜா நாயகி அவர்கள் தம் மாளிகையின் மேல்தளத்தில் நின்றவாறு நபிகளாரையும் நிழல் தந்துகொண்டிருக்கும் பறவைகளையும் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

வணிகக்குழு மக்காவை அடைந்த பின்னர் மிகுந்த ஆதாயம் கிடைத்த செய்தியை மைஸரா என்பவர் கதீஜா நாயகி(ரலி)யிடம் எடுத்துரைத்தார். நிழலிட்டுக் கொண்டு வந்த அப்பறவைகள் குறித்து கதீஜா நாயகி அவர்கள் அடிமை மைஸராவிடம் வினவினர். அவர், 'இங்கிருந்து புறப்பட்டுச் சென்றதிலிருந்து இங்கு வந்து சேர்ந்ததுவரை இவ்வாறே

அவர்களில் நிகழ்ந்தன' என்று கூறினார். வழியில் நிகழ்ந்த அற்புதங்களையெல்லாம் விளக்கினார்.

மைஸராவிடம் கேட்டறிந்த செய்திகள் மூலம் ஹலரத் கதீஜா (ரலி) அவர்கள் நபிகளாரை மணந்திட ஆசைகொண்டார்கள். சூழ்நிலைகள் சாதகமாகி, நபிகளாரை கதீஜா நாயகியவர்கள் மணந்திட்டார்கள்.

இத்திருமணத்தின்மூலம் அபூதாலிப் அவர்கள் மிக்க மகிழ்ச்சியடைந்தவர்களாக 'நம்துயரங்கள், மனக்கவலைகள், நீக்கிய நாயனுக்கே அனைத்துப் புகழும்' என்று கூறி இறைவனுக்கு நன்றி செலுத்தினார்கள். திருமணத்தின் பொழுது அண்ணலாரின் அகவை (வயது) இருபத்தைந்து; அன்னை கதீஜா (ரலி) அவர்களின் அகவை நாற்பது.

நபி (ஸல்) அவர்களுக்குப் பிறந்த குழந்தைகள் யாவும் அன்னை கதீஜா (ரலி) அவர்கள் மூலமே பிறந்தவையாகும்.

1. ஹலரத் காசிம், 2. ஹலரத் ஜைனப், 3. ஹலரத் ருகைய்யா, 4. ஹலரத் அப்துல்லாஹ், 5. ஹலரத் உம்முகுல்தூம், 6. ஹலரத் பாத்திமா ஆகியோர்களாவர். ஆனால் ஹலரத் இப்றாஹீம் அவர்கள் மட்டும் மாரியத்துல் கிப் திய்யா அவர்களின் வயிற்றில் பிறந்தார்கள்.

நபி (ஸல்) அவர்களுக்கு நபிப்பட்டம் அருளப்படுவதற்கு முன்னரே ஜைனப் (ரலி), ருகைய்யா (ரலி), உம்முகுல்தூம் (ரலி) ஆகிய இம்மூவருக்கும் திருமணம் நிகழ்ந்துவிட்டது. ஹலரத் ஜைனப் (ரலி) அவர்களை அவர்களின் சிறிய தாயாரின் மகன் அபுல் ஆஸ் அவர்களுக்குத் திருமணம் செய்யப்பட்டிருந்தது. இத்திருமணத்தின் மூலம் அலி என்னும் பெயர் பூண்டஓர் ஆண் குழந்தைப் பிறந்து பருவ வயதை எய்துவதற்கு முன்னே இறந்துவிட்டது.

மேலும், உமாமா என்னும் பெயர் கொண்ட ஒரு மகவு பிறந்தது. அவர்களை ஹலரத் அலீ (ரலி) அவர்கள் தம் துணைவியார் பாத்திமா (ரலி) அவர்களின் வஸிய்யத்துப் படி அவர்களின் மரணத்திற்குப் பின் மணந்துகொண்டார்கள்.

ஹலரத் ருகைய்யா (ரலி) அவர்களை அபூலஹபின் இறப்பிற்குப்பின், உத்பாவுக்கும் ஹலரத் உம்முகுல்தூம் (ரலி) அவர்களை இளைய மகன் உதைபாவிற்கும் மணமுடிக்கப்பட்டிருந்தது. ஹலரத் காசிமும் ஹலரத் அப்துல்லாஹ்வும் குழந்தைப் பருவத்திலேயே இறந்துவிட்டனர்.

நபி (ஸல்) அவர்கள் மக்காவைத் துறந்து, மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்ற பின்னர் ஹலரத் இப்றாஹீம் பிறந்தார்கள். ஹலரத் கதீஜா (ரலி) அவர்களை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மணந்து கொண்டதால் பல வகையிலும் உதவிாக இருந்தார்கள். நபி (ஸல்) அவர்களுக்கு நபிப்பட்டம் அருளப்பட்ட பின்னர் பல்வேறு துன்பங்களும், சோதனைகளும் தாக்குதல்களும் உயிருக்கே உலைவைத்திட்ட பயங்கர நிலையும் ஏற்பட்டன.

எனினும் ஹலரத் கதீஜா (ரலி) அவர்களுக்கு இருந்த செயல்வாக்கால் பகைவர்கள் அஞ்சியிருந்தனர். மேலும் கதீஜா (ரலி) தம் செல்லக்குவியல்களெல்லாம் தீன் எனும் செழும் பயிர் வளர்ந்திட அள்ளி அள்ளிக் கொடுத்தார்கள். பகைவர்களால் நபி (ஸல்) அவர்களுக்கு இடுக்கண் எதுவும் நேர்ந்திட்டால் அன்னையவர்கள் ஆறுதல் மொழிகள் கூறி தேற்றி வந்தனர். அன்னையின் திருமுகம் கண்டு, தம் கவலைகளை அண்ணலார் அகற்றி வந்தனர்.

நபியவர்களின் முதல் திருமணம் கதீஜா (ரலி) அவர்களுடன் தான். அன்னை அவர்கள் உயிர் வாழ்ந்த காலம் வரை வேறு திருமணம செய்து கொள்ளவில்லை.

நபி (ஸல்) அவர்களிடம் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் கூறினார்கள். "ஓ நபியே! சால்னா நிறைந்த ஒரு பாத்திரத்தை கதீஜா (ரலி) இப்பபொழுது எடுத்து வருகிறார்கள். வந்த பின்னர் அல்லாஹ்வின் புறத்தாலும் என் புறத்தாலும் ஸலாம் கூறி அவர்களுக்காக சுவனபதியில் ஒரே முத்தால் துளைக்கப்பட்ட ஒரு வீடு அமைக்கப்பட்டுள்ளது. இன்னும் அதில் யாதொரு கூச்சலும், கவலையும் இருக்காது என்று நன்மாராயம் சொல்லுக!" என்றார்கள். - மிஷ்காத் ஷரீஃப்

## 5. அண்ணலுக்கு இன்னல்கள் விளைவித்த பகைவர்கள்

ஏகத்துவத்தின்பால் மக்களை அழைத்துவந்த மாநபி (ஸல்) அவர்களுக்கும் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டிருந்த முஸ்லிம்களுக்கும் மக்கத்து காஃபிர்கள் சொல்லாணாத் துன்பங்களை இழைத்து வந்தனர். குறிப்பாக ஏழை முஸ்லிம்களைப் பசியாலும் தாகத்தாலும் வதைத்தனர். இன்னும் சிலருக்கு உருக்குச் சட்டையை அணிவித்து கடும் வெயிலில் கிடத்தியும் தடியால் அடித்தும் கொடுமைகள் செய்தனர்.

நபி (ஸல்) அவர்களுக்கு ஆதரவாக அபூதாலிபும் கதீஜா (ரலி) அவர்களும் துணையிருந்தும் காஃபிர்கள் நபி (ஸல்) அவர்கள் நடந்து செல்லும் பாதைகளில் சாணத்தைப்ப போட்டு வந்தனர்.

ஒரு முறை காஃபிர்கள் நபி (ஸல்) அவர்களைப் பலவாறாக ஏசினார்கள். அவர்களுள் ஒரு கொடியவன் நபிகள் (ஸல்) அவர்களின் கழுத்தில் ஒரு துண்டைப்போட்டு முறுக்கினான். அதனால் நபி (ஸல்) அவர்கள் மூச்சுத் திணறி போனார்கள். அப்பொழுது அபூபக்கர் சித்திக் (ரலி) தடுக்க முற்பட்ட பொழுது நபி (ஸல்) அவர்களை விட்டு விட்டு, அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களை அடித்து அவர்களின் தலையில் பெரும்காயத்தை ஏற்படுத்தி விட்டனர்.

- ரவ்ளத்ததுல் அஹ்பாப் - புகாரீ

இன்னொரு முறை கஃபாவில் நபி (ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருந்தனர். அபூஜஹ்ல் சிலரை அழைத்துக் கொண்டு வந்து அங்கு அமர்ந்திருந்தான். அருகில் ஓர் ஒட்டகத்தின் குடல் கிடந்தது. அபூஜஹ்ல் அதனை எடுத்து முஹம்மதுவின் மீது போடுங்கள் என்றான். அவன் கூறியதைக் கேட்ட ஒருவன், நபி (ஸல்) அவர்கள் சஜ்தாவில் இருந்திட்ட பொழுது அவர்களின் கழுத்தில் போட்டுவிட்டான். அவர்கள் எழமுடியாமல் சஜ்தாவிலேயே சிறிது நேரம் இருந்தனர். அதனைக்கண்டு பகைவர்கள் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்தனர்.

இப்னுமஸ்ஊத் கூறுகின்றார்கள்: அங்கு நானும் இருந்தேன்; அச்சத்தின் காரணமாக எதும் செய்ய இயலாது சும்மாயிருந்துவிட்டேன். இதுபற்றி பாத்திமா (ரலி) அவர்களிடம் ஒருவர் கூறிவிட்டார். அவர்கள் அங்கு வந்து, தந்தையின் கழுத்தில் கிடந்த ஒட்டகக் குடலை எடுத்தெறிந்து விட்டு குஃப்பார்களைப் பலவாறாக ஏசினார்கள். பத்துஆச் செய்தார்கள். பின்னர் நபி (ஸல்) அவர்கள் தொழுது முடித்தனர்.

நபி (ஸல்) அவர்கள் தமக்கு எத்தகைய இன்னல்கள் இழைக்கப்பட்டாலும் பொறுமையாக இருப்பார்கள். மேலும் நல் துஆவே செய்வார்கள். இறைவா! அவர்களுக்கு நேர்வழி காட்டியருள்வாயாக! என்பார்கள். ஆனால், இம்முறை தொழுகையில் குஃப்பார்கள் இவ்வாறு நடந்து கொண்ட காரணத்தால் நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹ்! இந்த குரைஷிகளுக்கு நீ தான் தக்கக் கூலியினைக் கொடுக்க வேண்டும்" என்று மூன்று முறை பத்துஆச் செய்தார்கள்.

- புகாரீ

## 6. ஹலரத் ருகைய்யா (ரலி) ஹபஷாவுக்குச் செல்லுதல்

மக்கத்துக் காபிர்கள் முஸ்லிம்களுக்கு எண்ணற்ற இடர்பாடுகள் விளைவித்து வந்தனர். கொடுமைகளைத் தாங்கிக் கொள்ள முடியாத நிலை ஏற்பட்ட பொழுது நபி (ஸல்) அவர்கள் முஸ்லிம்களை ஹபஷா நாட்டிற்குச் சென்று விடுமாறு கட்டளையிட்டனர்.

அதன்படி நபிகளாருக்கு நபிப்பட்டம் வந்த ஐந்தாம் ஆண்டு ரஜப் மாதம், 11 ஆண்களும், 4 பெண்களும் எவரும் தெரியாவண்ணம் மக்காவைத் துறந்து ஹபஷா நாட்டிற்கு ஹிஜ்ரத் செய்தனர். எல்லோருக்கும் முன்னரே ஹலரத் உஸ்மானுப்னு அஃப்பான் (ரலி) அவர்கள் தங்கள் துணைவியார் ருகைய்யா (ரலி)வுடன் பயணம் புறப்பட்டு விட்டனர். நபி (ஸல்) அவர்கள், உஸ்மான் (ரலி) அவர்களுக்காக துஆச் செய்துவிட்டு ஹலரத் லூத் (அலை) அவர்களின்

ஹிஜ்ரத்திற்குப் பின்னர், உஸ்மானுப்னு அஃப்பான்தான் குடும்பத்துடன் ஹிஜ்ரத் செய்தவர்களுள் முதன்மையானவர் ஆவார்; இவர் தம் மனைவியுடன் ஹபஷாவுக்கு ஹிஜ்ரத் செய்துள்ளார் என்றார்கள்.

அடுத்து நபி (ஸல்) அவர்களின் சிறிய தந்தையின் மகன் ஜஃபர் இப்னு அபூதாலிப் (ரலி) அவர்கள் தமது மனைவி அஸ்மாபின்த்து உமைஸ் (ரலி) உடன் ஹபஷா நாட்டிற்குப் புறப்பட்டுச் சென்றார்கள்.

நாடு துறந்து தம் நாட்டில் தஞ்சம் புகுந்திருந்த முஸ்லிம்களை ஹபஷா நாட்டு மன்னராகிய நஜ்ஜாஷி என்பார் பரிவுடனும், அன்புடனும் நடாத்தினார். அதன் பின்னர் பல ஆடவரும், பெண்டிரும் ஹபஷாவிற்குச் சென்றனர்.

- ரவ்ளத்துல் அஹ்பாப்

நபிப்பட்டம் கிடைத்த ஆறாவது ஆண்டில் நபிகளாரின் சிறிய தந்தை ஹம்ஸா (ரலி) அவர்களும் ஹலரத் உமர் (ரலி) அவர்களும் முஸ்லிம்கள் ஆனார்கள்.

## 7. மலைக்கணவாயில் பாதுகாப்பு

இஸ்லாத்தின் வளர்ச்சிகண்டு அதிர்ச்சிகொண்ட குஃப்பார்கள் நபியவர்களைக் கொலை செய்திடும் எண்ணங் கொண்டனர். இச்செய்தி அபூதாலிப் அவர்களுக்கு எட்டிற்று, நுபுவ்வத்துக் கிடைத்த ஏழாம் ஆண்டு நபி (ஸல்) அவர்களையும், மற்றதோழர்களையும் இன்னும் ஹாஷிம் கிளையார், முத்தலிபு கிளையார்களையும், தமக்குச் சொந்தமான மலைக் கணவாயில் அழைத்துச் சென்று நபி (ஸல்) அவர்களுக்கு எத்தகைய இடையூறும் ஏற்படாதவாறு பாதுகாப்பாக தங்க வைத்தார்கள்.

அது சமயம் காஃபிர்கள், "முஹம்மதுடையவும் அவரின் கிளையார்களுடையவும் உறவுகளை முறித்துவிட்டோம்" எனக் கூறி ஓர் உடன் படிக்கை அறிக்கையை எழுதி, கஃபாவில் தொங்க விட்டனர். மேலும் உணவும், மற்ற பொருள்களும் அங்குச் செல்வதற்கும் தடைவிதித்து விட்டனர். மேலும்

எவராவது கணவாயிலிருந்து வெளியே வந்தால் காஃபிர்கள் அவர்களைத் துன்புறுத்தி வந்தனர். எனினும் மறைவாகப் பொருள்களை வாங்கிக் கொண்டுதான் இருந்தனர்.

இப்படியே கணவாயில் எல்லோரும் நெருக்கடியான நிலையில் வாழ்ந்து வந்தனர். இக்கொடுமையினால் அவர்களின் குழந்தைகள் அழும் அவலக்குரல்கள் குரைஷி காஃபிர்களின் வீடுகள் வரைக் கேட்கத் தொடங்கின.

இறுதியாக இறைவனின் கட்டளையால் ஒரு பூச்சி அந்த உடன்படி;கைக அறிக்கையை அல்லாஹ்-ரசூல்-என்னும் சொற்களைத் தவிர்த்து மற்றவற்றையெல்லாம் அரித்துவிட்டது. இது நபி (ஸல்) அவர்களுக்குத் தெரிந்ததும் அபூதாலிபுக்குச் சொல்லி அனுப்பினார்கள். அவர்கள் மக்களிம், இந்த உடன்படிக்கையின் அறிக்கையில் உள்ள வாசகங்கள் அனைத்தும் பூச்சியால் அரிக்கப்பட்டுவிட்டன; அதில் அல்லாய்-ரசூல் என்னும் சொற்களே மீதியுள்ளன என்று முஹம்மது கூறுகின்றார்கள். நீங்கள் அவர் கூறியவாறு அந்த அறிக்கை இருப்பின் எங்களை எதுவும் செய்யக்கூடாது. இல்லாவிடின் முஹம்மதுவை என்ன செய்ய நாடினாலும் செய்து கொள்ளுங்கள் என்று கூறினார்கள்.

பின்னர் அவர்கள் சென்று அறிக்கையைப் பார்த்த பொழுது நபி (ஸல்) அவர்கள் கூறியவாறே இருந்திடக் கண்டார்கள். எனினும் சிலர் ஏற்க மறுத்தனர். மற்றவர்களின் உதவியால் மூன்று ஆண்டுகளுக்குப்பின்னர் அதாவது நபிப்பட்டம் கிடைத்து பத்தாம் ஆண்டு அக்கணவாயில் இருந்து வெளிப்போந்தனர்.

- ரவ்ளத்துல் அஹ்பாப் - தலாயிலுந்நுபுவ்வத்

## 8. அன்னை கதீஜாவின் மரணம்

நபி (ஸல்) அவர்களுக்கு நபிப்பட்டம் கிடைக்கப்பெற்ற பத்தாம் ஆண்டு அபூதாலிப் மரணமானார்கள். இப்பெருந்துயரம் நீங்குவதற்குள்ளாக, ரமளான் மூன்றாம் நாள் அன்னை கதீஜா (ரலி) அவர்கள் இவ்வுலக வாழ்வை நீத்து விட்டார்கள்.

அப்பொழுது அன்னையின் அகவை அறுபத்தைந்து. அவர்களை ஹஜூன் என்னும் இடத்தில் அடக்கம் செய்யப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் மண்ணறையின் அருகே வந்து துஆ செய்தார்கள். (அண்ணலார் (ஸல்) அவர்கள் அன்னையவர்களுடன் இருபத்தைந்து ஆண்டுகள் வாழ்ந்திருந்தார்கள்.)

அன்னையின் பிரிவால் அண்ணலார் (ஸல்) அவர்கள் மிகத்துயர் கொண்டனர். கவலை மிகுதியால் வீட்டை விட்டும் வெளியில் வருவதை தவிர்த்துக்கொண்டனர். அதன் காரணமாக அந்த ஆண்டிற்கு 'ஆமுல் ஹுஜ்ன்' கவலை ஆண்டு எனப்பெயர் வழுங்கலாயிற்று.

அன்னை கதீஜா (ரலி) அவர்கள் மீது கொண்ட அச்சத்தின் காரணமாக அடங்கியிருந்தக் குரைஷிகள் அன்னையின் இறப்பினால் துணிவு பெற்றனர். நபி (ஸல்) அவர்களுக்குப் பல்வேற துன்பங்களை இழைத்திட முன்வந்தனர்.

எடுத்துக்காட்டாக ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் குரைஷியர் குழுமியிருந்த பக்கம் சென்று கொண்டிருந்தபோது குரைஷிகள் ஒரு போக்கிரியைத் தூண்டிவிட அக்கயவன் அண்ணலின் தலையில் மண்ணை வாரி இறைத்தான். அதே நிலையில் அண்ணலார் தம் இல்லம் வந்தனர். நபி (ஸல்) அவர்களை இந்நிலையில் கண்ட பாத்திமா (ரலி) ஓடி வந்து அவர்களின் தலையிலும் முகத்திலும் படிந்திருந்த மண்ணையும், தூசையும் துடைத்து விட்டார்கள். அது சமயம் "மகளே! அபூதாலிப் வாழ்ந்திருந்த காலம் வரை எனக்குத் துன்பம் விளைத்திடக் குரைஷிகள் துணிவுபெறாதிருந்தனர். அல்லாஹ் உனது தந்தைக்கு உதவிடுவான்' என்று கூறினர்.

அன்னை கதீஜா (ரலி) காலமானபோது பாத்திமா (ரலி) அவர்களுக்கு ஏறத்தாழ பதினைந்து வயதிருக்கும். கதீஜா (ரலி) அவர்களின் இறப்பிற்குப் பின்னர் குஃப்பார்களின் தொல்லைகள் தாங்க முடியாத அளவிற்குப் போய்விட்ட காரணத்தால், மக்காவை விட்டுத் தாயிஃப் நகரத்திற்கும், மற்ற பகுதிகளுக்கும் சென்றிட வேண்டியநிலை ஏற்பட்டது. சென்ற இடங்களிலும் துன்பங்கள் நிழல்போல் தொடர்ந்தன.

மீண்டும் மக்காவிற்கு வந்து விட்டார்கள். ஹலரத் கதீஜா (ரலி) அவர்கள் இறந்த அதே ஆண்டு, ஷவ்வால் மாதத்தில் ஹலரத் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களின் மகள், ஹலரத் ஆயிஷா (ரலி) அவர்களை மணந்தார்கள். அது சமயம் ஆயிஷா (ரலி) அவர்களின் அகவை ஆறு. அவர்களுடன் வீடு கூடவில்லை. ஹலரத் ஸவ்தா (ரலி) அவர்களை மணம் புரிந்து வீடு கூடினார்கள். ஸவ்தா அவர்கள் கைம் பெண்ணாகியிருந்தனர்.

- ரவ்ளத்துல் அஹ்பாப்

## 9. மக்காவிலிருந்து மதீனாவிற்குச் செல்லுதல்

நபித்துவம் பெற்ற பதினோறாம் ஆண்டு ஹஜ்ஜுடைய நாளில் மதீனாவைச் சேர்ந்தவர்கள் மக்காவிற்கு வந்தனர். அவர்களுள் சிலர் இஸ்லாத்தில் இணைந்தனர். பன்னிரெண்டாம் ஆண்டு, பத்துப்பன்னிரெண்டு பேர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து பைஅத்துச் செய்து இஸ்லாத்தில் இணைந்தனர்.

பதின்மூன்றாம் ஆண்டு சுமார் எழுபது பேர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, பைஅத்துச் செய்து இஸ்லாத்தில் இணைந்ததுடன் தாங்கள் மதீனா வருகை தந்தால் எங்கள் உடல், பொருள், உயிர் முதலியவற்றால் உங்களுக்கு உதவிவோம் என்றனர்.

இவ்வாறு பைஅத்தும் வாக்குறுதியளித்தலும் நிகழ்ந்த பின்னர் குரைஷி காஃபிர்களின் துன்புறுத்துதலைச் சகிக்காது தம் அருமைத் தோழர்களை மதீனாவிற்குச் செல்லுமாறு அனுமதியளித்தனர்.

மதீனாவிற்கு மிகுதியானவர்கள் சென்றுவிடின் அங்கு இஸ்லாத்தின் வளர்ச்சிக்கு மிகுதியான உதவிகள் கிடைத்து விடக்கூடும் என்ற தீய எண்ணத்தால் அச்சம் கொண்ட வஞ்சக நெஞ்சினர்களாம் குரைஷிக் குஃப்பார்கள், 'தாருந் நத்வா' என்றும் பேரவையில் ஒன்றுகூடி நபிகளாரைக் கொலை செய்திடவேண்டும் என்று முடிவு செய்தனர்.

உடனே விண்ணவர் தலைவராம் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் மண்ணகம் இறங்கி மாநபி (ஸல்) அவர்களிடம் நாளையே மதீனாவிற்கு ஹிஜ்ரத் செய்திட ஆயத்தமாகுங்கள் என்னும் இறைச் செய்தியைக் கொண்டுவந்தார்கள்.

அன்றிரவு மக்கத்துக் காஃபிர்கள் மாநபியைக் கொலை செய்யும் எண்ணத்துடன் அண்ணலாரின் வீட்டைச் சூழ்ந்து கொண்டனர். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் ஹலரத் அலீ (ரலி) அவர்களிடம், 'தாங்கள் இன்றிரவு என் விரிப்பில் என்னுடைய போர்வையைப் போர்த்திக்கொண்டு படுத்துக் கொள்ளுங்கள்; உங்களுக்கு யாதொரு இடரும் அணுகாது; துணிவுடன் இருங்கள்' எனக்கூறி விட்டு, தங்களிடம் பாதுகாப்பிற்காகக் கொடுத்து வைத்திருந்த சில அமானிதப் பொருள்களை ஒப்டைத்து இவற்றை இப்பொருள்களுக்குரியவர்களிடம் ஒப்படைத்து விடுங்கள்; நான் நாளை மதீனாவிற்குச் செல்கிறேன். நான் அங்குச் சென்ற பின்னர் தாங்களும் வந்து விடுங்கள் எனக் கூறி புறப்பட்டார்கள். (அப்பொழுது அலீ (ரலி) அவர்களின் அகவை இருபத்தி ரெண்டு).

நபி (ஸல்) அவர்கள் வீட்டிலிருந்து வெளியே வந்து யாஸீன் என்னும் திருமறை அத்தியாத்தின் துவக்கத்திலிருந்து "ஃபஅக்ஷைனாஹும் ஃபஹும்லாயுப்ஸிருன்" வரையும் ஓதி, ஒருபிடி மண்ணை அள்ளிக் காஃபிர்களின் பக்கம் எறிந்து விட்டுச் சென்றுவிட்டார்கள். அதுவரையும் அந்தக் காஃபிர்களுக்கு ஒன்றும் தெரியவில்லை. பின்னர் யாரோ ஒருவன் (இப்லீஸ்) "முஹம்மது போய்விட்டார் உங்களுக்கு இன்னும் தெரியவில்லையா?" என்று கூறினான். (அவன் மொழி கேட்டு) குஃப்பார்கள் வீட்டினுள் நுழைந்தனர். ஹலரத் அலீ (ரலி) அவர்கள் போர்த்தியிருந்த போர்வையைக் கண்டு, நபிகளார் தான் என்றெண்ணினர்.

அதற்குள்ளாக ஹலரத் அலீ (ரலி) அவர்கள் தம் படுக்கையை விட்டு எழுந்திட காஃபிர்கள் "முஹம்மது எங்கே?" என வினவினர். ஹலரத் அலீ 'நான் அறியேன்' என்றனர்.

காபிர்கள் நபி (ஸல்) அவர்களைத் தேடிப் புறப்பட்டனர். இது இவ்வாறிருக்க நபி (ஸல்) அவர்கள் காஃபிர்களின் கண்களில் மண்ணைத் தூவிவிட்டு, அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களின் இல்லம் சென்று அவர்களை அழைத்துக்கொண்டு தவ்ர் என்னும் மலைப்பொதும்பில் முழுமையாக மூன்று இரவுகள் தங்கிய பின்னர் அதிலிருந்து புறப்பட்டு மதீனா சென்று 'குபா' என்னுமிடத்தில் சேர்ந்தனர்.

ஹலரத் அலீ (ரலி) அவர்கள் தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட அமானிதப்பொருள்களை உரியவர்களிடம் சேர்ப்பித்து விட்டு, மூன்று நாட்களுக்குப்பின்னர் மதீனா வந்து சேர்ந்தனர்.

பின்னர் நபி (ஸல்) அவர்கள் குபாவை விட்டும் புறப்பட்டு அபூஅய்யூபுல் அன்சாரி என்னும் தோழரின் வீட்டில் தங்கினர். பின்னர் நபி (ஸல்) அவர்கள் ஜைதுப்னு ஹாரிஸாவையும், தங்களால் உரிமையிடப்பட்டவரான (அடிமை) அபூராஃபியையும் அழைத்து ஐநூறு திர்ஹம்களும் இரண்டு ஒட்டகைகளும் கொடுத்து மக்காவில் பாத்திமா (ரலி)வையும் உம்முகுல்தூம் (ரலி) வையும் மனைவி ஸவ்தா (ரலி)வையும் மேலும் உஸாமா வையும் அவரின் அன்னை உம்மு ஜமனையும் தந்திரமாக மதீனாவுக்கு அழைத்து வருமாறு அனுப்பி வைத்தனர்.

அவ்வாறே அவர்களை மதீனாவுக்கு அழைத்துக்கொண்டு வந்தனர். அவர்களுடன் அபூபக்கர் (ரலி) வின் மகன் அப்துல்லாஹ்வும் அவரின் தங்கை ஆயிஷா (ரலி)வும் அஸ்மா (ரலி)வும் அவர்களின் அன்னை உம்மு ரூமானும் மதீனா வந்து சேர்ந்தனர்.

அதுபொழுது நபி (ஸல்) அவர்கள் அபூஅய்யூபுல் அன்சாரியின் வீட்டில் குடியிருந்தனர். பின்னர் நபி (ஸல்) அவர்கள் தங்கள் குடும்பத்தினர்களுக்காகப் பள்ளிவாசலுக்கு அருகில் ஒரு வீட்டைக் கட்டத் துவங்கி, ஹலரத் ஆயிஷா (ரலி) ஹலரத் சவ்தா (ரலி) அவர்களுக்காகவும் இரண்டிரண்டு அறைகள் கட்டி முடித்தனர்.

அதன் பின்னர் புதிய வீட்டிற்குக் குடியேறினார்கள். நபிகளாரின் பெரிய மகளார் ஜைனபை, இதுவரையும் ஈமான்

கொள்ளாதிருந்த அவர்களின் கணவர் அபூல்ஆஸ் மதீனா செல்வதற்குத் தடை விதித்துவிட்டார்.

மக்காவைத் துறந்து மதீனா சென்ற இந்த ஹிஜ்ரத்திலிருந்து ஒன்பது மாதங்கள் கழிந்த பின்னர் நபி (ஸல்) அவர்கள் ஹலரத் ஆயிஷா (ரலி) யுடன் குடும்ப வாழ்க்கையைத் துவங்கினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஒரு பாத்திரம் பாலைக்கொண்டு வலீமா விருந்து கொடுத்தார்கள். அதுபொழுது ஹலரத் ஆயிஷா (ரலி)வின் அகவை ஒன்பது.

- ரவ்ளத்துல் அஹ்பாப்

## 10. பாத்திமா (ரலி)வின் திருமணம்

ஹலரத் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் தமக்கு பாத்திமா (ரலி) அவர்களை மணம் செய்து வைக்குமாறு கேட்டனர். அதற்கு நபி (ஸல்) அவர்கள் பாத்திமாவின் திருமணம் குறித்து அல்லாஹ்விட மிருந்து வஹியை எதிர்ப் பார்க்கிறேன்" என்றனர். இதுபற்றி ஹலரத் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் ஹலரத் உமர் (ரலி) அவர்களிடம் கூறினார்கள். அதற்கவர்கள் நபிகளார் தாங்கள் பெண் கேட்டதை மறுத்துவிட்டார்கள். தங்களுக்கு அவர்கள் பெண் தரமாட்டார்கள்" எனக் கூறினார்கள்.

சில நாட்களுக்குப் பின்னர் அபூபக்ர் (ரலி) அவர்கள் உமர் (ரலி) அவர்களிடம் 'தாங்கள் பாத்திமா (ரலி)வைத் தங்களுக்குத் திருமணத் செய்து வைக்குமாறு நபிகளாரிடம் கேளுங்கள்' என்றார்கள்.

அவ்வாறே உமர் (ரலி) அவர்கள் நபிகளாரிடம் வந்து பாத்திமா (ரலி)வைத் தமக்குத் திருமணம் செய்து கொடுக்குமாறு வேண்டினர். 'அப்பொழுதும் நபிகள் (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களுக்குக் கூறிதையே இவர்களுக்கும் கூறினார். இச்செய்தியை ஹலரத் உமா ஃபாரூக் (ரலி) அவர்கள் ஹலரத் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் கூற தாங்கள் பெண் கேட்டதை நபி (ஸல்) அவர்கள் மறுத்துவிட்டார்கள். தங்களுக்கும்

ஃபாத்திமா(ரலி)வை மணமுடித்துக் கொடுக்க மாட்டார்கள் போலும்" என்று கூறினார்கள்.

சில நாட்களுக்குப் பின்னர் ஹலரத் அலீ (ரலி) அவர்களிடம் அவர்களின் உறவினர்கள் "நீங்கள் நபி (ஸல்) அவர்களிடம் சென்று பாத்திமா (ரலி)வைத் திருமணம் செய்து வைக்குமாறு கேளுங்கள்" என்றனர். அதற்கவர்கள் 'ஹலரத் அபூபக்ர் (ரலி) ஹலரத் உமர் (ரலி) ஆகிய இருவரும் கேட்டு இல்லை என்று கூறிவிட்ட பிறகு எனக்கு எவ்வாறு பெண் கொடுப்பார்கள்?' என்றனர். .

'அப்படியல்ல; நாங்கள் நபி (ஸல்) அவர்களுக்கு நெருக்கமான உறவினராக இருப்பதனால் தங்களுக்கு பாத்திமா (ரலி) வைத் திருமணம் செய்து வைக்கலாம்' என்று உறவினர்கள் கூற ஹலரத் அலீ நபி (ஸல்) அவர்களிடம் வந்து ஸலாம் கூறி அமைதியாக இருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் ஸலாமிற்குப் பதில் கூறிவிட்டு, 'அலீயே என்ன விஷயம் எங்கு வந்தீர்? எனக் கேட்க பாத்திமா (ரலி) வை எனக்கு திருமணம் செய்து தாருங்கள் என கேட்க வந்தேன்' என்று சொன்னார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் மர்ஹபன் வஅஹ்லன் உமக்கு நன்மாராயம் உண்டாகட்டும் என்று கூறினார்கள்.

அலீ (ரலி) இவ்வாறு கேட்டதை நபி (ஸல்) அவர்கள் தம் அருமை மகள் பாத்திமா (ரலி) அவர்களிடம் அலீ (ரலி) உம்மைத் தமக்குத் திருமணம் செய்து வைக்குமாறு கேட்கின்றார் என்று சொல்ல, ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் ஏதும் கூறாமல் இருந்து விட்டார்கள். ஹலரத் அனஸ் (ரலி) கூறுகின்றார்கள் : அது சமயம் நானும் அங்கிருந்தேன். நபி (ஸல்) அவர்களுக்கு வஹீயின் அடையாளங்கள் தென்பட்டன. பின்னர் தெளிவு பெற்று ஓ அனஸே! ஜிப்ரயீல் (அலை) வருகைத் தந்து அல்லாஹ் பாத்திமா (ரலி) வை அலீ (ரலி)வுக்குத் திருமணம் செய்து வைக்குமாறு கூறியதாகச் சொன்னார் என்றார்கள். எனவே நீர் சென்று அபூபக்ர் (ரலி) உமர் (ரலி) உஸ்மான் (ரலி) தல்ஹா (ரலி) ஜுபைர் (ரலி)

வையும் மற்றும் அன்சாரிகளையும் அழைத்து வாரும் என்றார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஹலரத் அலீ (ரலி)யை நோக்கி "உம்மிடம் மஹர் கொடுக்க என்ன இருக்கிறது?" எனக் கேட்க அவர்கள் ஒரு குதிரையும், ஓர் உருக்குச் சட்டையும் இருக்கிறதென்றார்கள். அது கேட்ட அண்ணலார் குதிரை உமக்கு மிகவும் தேவையானது உருக்குச் சட்டையை விற்று விடும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அலீ (ரலி) அவர்கள் உருக்குச் சட்டை எடுத்துக்கொண்டு கடைவீதி சென்றனர். அதனை உஸ்மான் (ரலி) அவர்கள் நானூற்று எண்பது திர்ஹம்களுக்கு வாங்கிக் கொண்டார்கள்.

பின்னர் அவர்கள் அவ்வுருக்குச் சட்டையை அலீக்கே அன்பளிப்பாக கொடுத்தனர். ஹலரத் அலீ (ரலி) அவர்கள் திர்ஹம்களைப் பெற்று அதனை ஒரு துணியில் முடிந்து வந்து நபி (ஸல்) அவர்களிடம் கொடுத்தனர். நபி (ஸல்) அவர்கள் இதில் எவ்வளவுள்ளது எனக் கேட்க ஹலரத் அலீ (ரலி) அமைதியாக இருந்தார்கள்.

## 11. பாத்திமா (ரலி)வின் சீர்வரிசை

நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) கொண்டுவந்து கொடுத்த பணத்தில் சிறிது எடுத்து ஹலரத் பிலால் (ரலி) அவர்களிடம் கொடுத்து பாத்திமா (ரலி)விற்கு மணப்பொருள்கள் வாங்கி வருமாறு கூறினர். உம்மு சுலைம் (ரலி) (ஹலரத் அனஸ் (ரலி)வின் தாயார்) விடம் மீதி பணத்தைக் கொடுத்து "பாத்திமா (ரலி) வுக்குச் சீர்பொருள்கள் வாங்குங்கள்" என்றார்கள்.

அப்பணத்தைப் பெற்றுக்கொண்டு உம்மு சுலைம் (ரலி) அவர்கள் 1. இருபோர்வைகள், 2. ஒரு தொழுகைவிரிப்பு, 3. ஒரு குவளை, 4. ஒரு திருகைக்கல், 5. இருவெள்ளி அணிகலன்கள், 6. தண்ணீர் எடுக்க ஒரு தோல் துருத்தி, 7. தண்ணீர் வைக்க இரு மண்பாண்டங்கள், 8. பேரீத்தம் மரத்தின் மேல்பட்டைகள் நிரப்பிய தோலினால் ஆன ஒரு தலையணை (இன்னொரு சொல்லின்படி நான்கு தலையணைகள் அவற்றில்

இரண்டு மயிரினால் நிரப்பப்பட்டது; மற்ற இரண்டும் பேரீத்தம் நாரினால் நிரப்பப்பட்ட தலையணைகளாகும்.) 9.ஒரு சாதாரணக் கட்டில், 10. ஆட்டு உரோமங்களால் ஆன ஒரு சாதாரண படுக்கை விரிப்பு.

இவைகள் தாம் பாத்திமா (ரலி) அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் அளித்த சீர்வரிசைகள்.

இன்றைய பாத்திமாக்களைத் திருமணம் செய்துகொள்ள விழையும் நம் இளைஞர்கள் மேற்கண்டவற்றைக் கொடுத்தால் சிறிது கற்பனைச் செய்து பாருங்கள் என்னவாகும். பெண் வீட்டாரைப் பிழிந்தெடுத்து அவர்களின் இரத்தத்தை உறிஞ்சியன்றோ சீதனப் பொருள்களைப் பெறுகின்றனர். அவற்றில் ஒன்று குறைந்தாலும் திருமண வீடு போர்க்களமாகவன்றோ மாறிவிடுகின்றது.

மஹர் கொடுத்து மணமுடிக்கும் மாப்பிள்ளைகள் சமுதாயத்தில் எத்தனை பேர்கள் உள்ளனர்? மஹர் கொடுக்க வக்கில்லை; வகையில்லை, கொடுப்பதில் ஒன்று குறைந்தால் மனைவியைத் தாய் வீட்டிற்கு அனுப்பிவிடுவது என்ற இழிநிலை தானே நம் சமுதாயத்தவர்களிம் நிலவிவரும் பழக்கமாக இருந்து வருகிறது.

ஆண் மகன் எனக் கூறிக்கொண்டு பெண்ணிடம் ஆண்மையற்றவனாக நடந்துகொள்ளும் இளைஞர்களைக் கண்டு அழுவதா சிரிப்பதா என்றே புரியவில்லை. அல்லாஹ்தான் இவர்களுக்கு நேர்வழி காட்டியருளவேண்டும்.

ஹலரத் அனஸ் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் ஆணைப்படி மக்களை அழைத்து வந்தனர். ஹலரத் அலீ (ரலி)யும் வருகை தந்தனர். இது நடந்தது ஹிஜ்ரீ இரண்டாம் ஆண்டு ரமளான் மாதம் நபி (ஸல்) அவர்கள் குத்பா ஓதினார்கள். பிறகு பாத்திமா (ரலி)யை, அலீ (ரலி) அவர்களுக்கு நூறு மிஸ்கால் வெள்ளி மஹருக்கு நிகாஹ் செய்து கொடுத்தேன்; அலீயே நீர் ஒப்புக்கொண்டீரா? எனக் கேட்டார்கள்.

ஹலரத் அலீ (ரலி) அவர்கள் ஒப்புக் கொண்டேன் எனக் கூறினார்கள். பின்னர் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ் உங்கள்

இருவரையும் இணைத்து வைப்பானாக! உங்கள் இருவரின் நஸீபையும் சீதேவித்தனமாக்கி வைப்பானாக! உங்கள் இருவருக்கும் பரக்கத்து அளிப்பதுடன் மிகுதியான மணமிக்க நல்ல குழந்தைகளை உங்கள் மூலம் வெளியாக்குவானாக! என்று இறைஞ்சினார்கள்.

ஒரு தட்டில் கஜூர் என்னும் காய்ந்த பேரீத்தம்பழம் கொண்டு வரப்பட்டு அதனை நபிகளாரின் அனுமதியின்படி மக்களுக்கு மத்தியில் இறைக்கப்பட்டது. ஹலரத் பாத்திமா (ரலி) அவர்களுக்குத் திருமணம் நிகழ்ந்த பொழுது அவர்களின் அகவைப் பதினெட்டாகும்.

- ரவ்ளத்துல் அஹ்பாப் - வமதாரிஜுந் நுபுவ்வத்

## 12. அறிவுரை

"திருமணங்களில் வீண் செலவு செய்வது தரித்திரத்தை உண்டாக்கும்" என்று இப்னு மாஜாவின் 'ஷரஹு இன்ஜாஹுல் ஹாஜா' வில் கூறப்பட்டுள்ளது. எனவே, ஒவ்வொரு முஸ்லிமும் திருமணங்களில் நடுத்தரமான செலவை மேற்கொள்வதைக் கவனத்தில் வைக்கவேண்டும்.

மேலும் ஹலரத் அலீ (ரலி) ஹலரத் பாத்திமா (ரலி) இவர்களின் திருமணத்தின் மூலம் இப்பாடத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டும். அதற்காக அவர்களுக்குக் கொடுக்கப் பட்ட சீதனப்பொருள்களையே நாமும் கொடுக்க வேண்டும் என்பதல்ல. ஆடம்பரமற்ற பெண் வீட்டாரின் பொருளாதார நிலைமைக்கு ஏற்ப எளிமையான மிக இன்றியமையாதனவான பொருள்களைப் பெற்றுக்கொள்வது தவறல்ல. கட்டாயப்படுத்தி எதனையும் பெண் வீட்டாரிடம் வாங்குவதை நிறுத்திக் கொள்ள வேண்டும்.

இதன்படி மிக எளிமையுடன் நாமும் நடந்து மற்றவர்களையும் இயன்றவரை அவ்வழியில் நடந்து கொள்ளுமாறு செய்ய வேண்டும். மேலும் ஷரீஅத்திற்குப் புறம்பான பாட்டுக் கச்சேரிகள், இந்துக்களுக்குரிய சடங்குகள் முதலியவை யாவும் ஒழிக்கப்பட வேண்டும். இத்தகைய

தீயபழக்கங்களை ஒழிப்பது அல்லாஹ் ரசூலின் திருப்பொருத்தத்திற்கும் மகிழ்ச்சிக்கும் காரணங்களாக அமைந்துவிடுகின்றன.

மேலும் வசதி படைத்தவர்கள் செய்யும் வீண் ஆடம்பரங்களைக் கொண்டு, ஏழை எளிய மக்களும் வீண் செலவுகள் செய்ய முற்பட்டு, கடனாளிகளாகிவிடுகின்றனர்.

கைசேதம்! இந்த முபாரக்கான எளிதான முறைகளை (திருமணத்தை) எந்த அளவிற்குச் கடினமானதாக ஆக்கி விட்டனர்!

இதனால் பெண்ணைப் பெற்றவர்கள் திருமணம் என்றாலே நடுங்கிப் போய்விடுகின்றனர். சிந்தித்துப் பாருங்கள். இத்தகைய ஆடம்பர, வீண் செலவுகள் மூலம் நடத்தப்படும் திருமணங்களால் ஏற்படும் மிகப்பெருந் தீங்கு யாதெனில் பல திருமணங்கள் நடைபெற முடியாத நிலை ஏற்பட்டு விட்டது. இதனால் விளைந்திடும் கெடுதி பாவங்களுக்கு 'வலீ' காரர்கள், பெண்ணின் உரிமையாளர்கள் பதில் சொல்லக் கடமைப்பட்டவர்களாக ஆகிவிடுகின்றனர். குறிப்பாக இது பற்றிய சிந்தனை பெண்களுக்கே இருக்கவேண்டும். பெண்கள்தாம் இத்தகைய ஹராமான வீணான, சடங்குகளுக்கு முக்கியத்துவம் கொடுப்பவர்கள் ஆவார்கள்.

பெண்கள் மனம் வைத்தால் அநேகமாக இவற்றைத் தடுத்துவிட முடியும். குறிப்பாக ஒவ்வொரு முஸ்லிமான ஆண்களும் பெண்களும் நபி (ஸல்) அவர்கள் பாத்திமா (ரலி)வின் திருமணத்தை எவ்வாறு எளிமையாகவும் செலவினங்களைக் குறைத்தும் செய்தார்களோ அவ்வாறே இயன்ற அளவிற்கு, நம் பொருளாதாரத்திற்குத் தக்கவாறு செலவுகளைக் குறைத்து நபிகளாரின் சுன்னத்துகளைப் பேணி நடந்திட முயல்வது நலமாகும்.

# 13. பாத்திமா (ரலி) வை, அலீ (ரலி) வீட்டிற்கு அனுப்புதல்

ஹலரத் ஆயிஷா (ரலி)வும், உம்மு சல்மா (ரலி) வும் கூறுகின்றார்கள்: நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் பாத்திமா (ரலி) அவர்களிடம் அனுப்பி வைத்திட ஆயத்தம் செய்யுங்கள் என்றார்கள்.

நாங்கள் ஓர் அறையில் மென்மையான மணலைக் கொட்டிப் பரப்பினோம். மேலும் ஈத்தம் நாரைக்கையால் சுற்றி இரண்டு தலையணைகளில நிரப்பினோம். இன்னும் சிறிதளவு (கஜூர்) ஈத்தம் பழம்-சிறிதளவு திராட்சைப்பழம் சிறிதளவு நல்ல தண்ணீர் முதலியவற்றை வைத்தோம். துணிகளையும் தண்ணீர் பையையும் மாட்டுவதற்காக ஒரு கம்பும் வைத்தோம். நாங்கள் (செலவு) குறைவிலும் - பரக்கத்திலும் பாத்திமா (ரலி) வின் திருமணத்தை விடச் சிறந்த யாதொரு திருமணத்தையும் கண்டதில்லை.

இன்றைக்கு நம் முஸ்லிம்கள் மணமகளை மணமகன் இல்லம் அனுப்பிட எத்தனை வகையான சடங்குகள் அனச்சார, பாவச்செயல்களையெல்லாம் செய்து வருகின்றனர்.

மணமகன் மணமகள் இல்லம் நுழைந்திடும்போது அரிசி இறைப்பதும் ஆட்டுத் தலையை மாப்பிள்ளை தலையில் சுற்றுவதும், வசதியுள்ளவன் ஆட்டையே சுற்றுவதுமான இழிந்தச் செயல்களயைும் அன்றே செய்து வருகின்றனர். சிறிதளவாவது ஈமானிய உணர்ச்சி, இஸ்லாமியப்பற்று இருக்குமானால் இத்தகைய இழிவான சடங்குகளையெல்லாம் செய்யத் தோன்றுமா?

நபி (ஸல்) அவர்கள் உம்மு சுலைமை அழைத்து 'உம்மகளை அலீயின் வீட்டிற்கு அழைத்துச் சென்று விடும். அலீயிடம் நான் வருவதாகச் சொல்லும் என்றனர். இஷாத் தொழுதபின்னர், நபி (ஸல்) அவர்கள் ஒரு கூஜாவில் தண்ணீர் எடுத்துக்கொண்டு ஹலரத் அலீ (ரலி)வின் இல்லம் சென்றனர். அந்தத் தண்ணீர் கூஜாவில் தங்களது உமிழ்நீரை (எச்சித்

துப்பி, குல்அவூது பிரப்பின் னாஸி, குல் அவூது பிரப்பில் ஃபலகி என்னும் திருவசனங்களை ஓதி வேறு சில துஆக்களையும் ஓதி, அலீ (ரலி) வை அழைத்து அதில் சிறிது நீரைக் குடித்துவிட்டு உளூச்செய்து கொள்ளுங்கள் எனக்கூறி பின்னர் பாத்திமா (ரலி) அவர்களையும் சிறிது தண்ணீர் குடித்துவிட்டு உளூச் செய்து கொள்ளுங்கள் எனச் சொன்னார்கள்.

இன்னுமோர் அறிவிப்பின்படி அத்தண்ணீரில் சிறது எடுத்து ஹலரத் பாத்திமா (ரலி)வின் தலையிலும் நெஞ்சிலும் தெளித்து இறைவா! பாத்திமாவுக்கும் அவரின் வழித் தோன்றல்களுக்கும் எடுத்தெறியப்பட்ட (மர்தூத்) ஷைத்தானின் (தீங்கை) விட்டும் பாதுகாவல் தேடுகின்றேன் என்று துஆச் செய்த பின்னர், ஹலரத் அலீ (ரலி) வின் தலையிலும், இருதோள்களுக்கு மத்தியிலும் சிறிது நீரைத் தெளித்து "இறைவா! அலீக்கும் அவரின் வழித்தோன்றல்களுக்கும் எடுத்தெறியப்பட்ட (மர்தூத் ஷைத்தானின் (தீங்குகளை விட்டும்) பாதுகாவல் தேடுகிறேன் என்று துஆச் செய்தார்கள்.

பின்னர் வீட்டை விட்டும் வெளியேறியபொழுது ஹலரத் பாத்திமா (ரலி) அழத்தொடங்கினார்கள். அப்பொழுது என் மகளே! ஏன் அழுகிறாய்! நான் உம்மை எல்லோரிலும் முதன்மையாக இஸ்லாத்திற்கு வந்தவரை மிக்க பொறுமையும் அனைவரையும்விட நற்குணங்கள் கொண்டவரும் அதிகமாக அல்லாஹ்வின் ஞானம் பெற்றவருக்கும் அன்றோ திருமணம் செய்து கொடுத்துள்ளேன்? என்று ஆறுதல் மொழி கூறினார்கள்.

– ரவ்ளத்துல் அஹ்பாப்-வ மதாரிஜுந்நுபுவ்வத்

ஹலரத் அலீ (ரலி) கூறுகின்றார்கள்: பாத்திமா (ரலி)வை என்னிடம் அனுப்பி வைக்கப்பட்டபொழுது அன்றிரவு எங்களின் படுக்கை ஆட்டின் தோலைத் தவிர ஒன்றுமில்லாதிருந்தது."

- இப்னுமாஜா

ஹலரத் பாத்திமா (ரலி) கூறியதாக அஸ்மாபின்த்து உமைஸ் சொல்கிறார்கள்: ஹலரத் அலீ என்னுடன் வீடுகூடிய இரவு

அவர்களுடன் பூமி பேசிக் கொண்டிருந்தது. நான் அதைக்கேட்டு அஞ்சிவிட்டேன். காலையில் அதுபற்றி நபி (ஸல்) அவர்களிடம் கூறினேன். கூறியதைச் செவியேற்ற நபி (ஸல்) அவர்கள் சஜ்தாவில் விழுந்து நீண்ட நேரத்திற்குப் பின்னர் எழுந்து, பாத்திமா! நன்மாராயம் உண்டாகுக! அல்லாஹ் உம்முடைய சந்ததிகளை, படைப்பினங்களைத் தூய்மையானவர்களாகப் படைப்பான். மேலும் அவர்கள் எல்லோரையும்விட மேன்மையானவர்களாக இருப்பார்கள். அல்லாஹ் தஆலா இந்த மகிழ்ச்சியான செய்தியையும், இன்னும் அவர்கள் காலத்தில் கிழக்கிலிருந்து மேற்கு வரையும் உலகில் நடக்கும் எல்லா செய்திகளையும் அறிவிக்குமாறு பூமிக்கு ஆணையிட்டுள்ளான்." என்று கூறினார்கள்.

## 14. வலீமா விருந்து

ஹலரத் அலீ (ரலி) அவர்கள் தங்கள் வலீமா விருந்திற்காக தன்னுடைய இரும்புக் கவசத்தை ஒரு யூதனிடம் அடமானம் வைத்து, ஒரு சேர் தொலிக் கோதுமை வாங்கினார்கள். அவ்விருந்தில் சிறிது தொலிக்கோதுமையையும், சிறிது பேரீத்தம் பழங்களையும், நெய்யையும் சேர்த்துச் செய்யப் பட்ட ஹல்வாவும் ஓர் ஆடும் இருந்தது. அக்காலத்தில் இதை விடவும் சிறந்த எந்த வலீமா விருந்தும் இல்லை.

– ரவ்ளத்துல் அஹ்பாப்-வ மவாஹிபுபந்நுபவ்வத்

என்ன கேட்டீர்களா? வலீமா விருந்தென்பது முதல் இரவிற்குப் பின்னர் மணமகன் வீட்டார் கொடுப்பதாகும். பெயர் தாங்கி முஸ்லிம்களே! நீங்கள் பெண் வீட்டாரிடம் சிறிதும் கூச்சமின்றி வெட்கம், மானமின்றி கைநீட்டிக் கைக்கூலி பெறுவதுடன் வலீமா விருந்தையும் அவர்கள் தலையிலேயே கட்டி விடுகின்றீர்களே? நியாயம் தானா? சிந்தியுங்கள்.

## 15. வீட்டு வேலைகள் செய்தல்

ரொட்டிச் சுடுதல், வீடு பெருக்குதல், கோதுமை அரைத்தல் போன்ற வீட்டுவேலைகளை பாத்திமா (ரலி) அவர்கள்

கவனித்துக்கொள்ள வேண்டுமென்றும், ஒட்டகைகளில் பால் கறத்தல், தண்ணீர் காட்டுதல், கடைவீதிக்குச் சென்று பொருள்கள் வாங்கி வருதல் போன்ற வெளி அலுவல்களை அலீ (ரலி) அவர்கள் அல்லது அவர்களின் தாயார் பாத்திமா பின்த் அஸத் கவனித்துக் கொள்ள வேண்டுமென்றும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

-ரவ்ளத்துல் அஹ்பாப் -மதாரிஜுந்நுபுவ்வத்

## சுன்னத்து

திருமணத்தில் வலீமா விருந்து கொடுப்பது சுன்னத்தாகும். விருந்து அழைப்பை ஏற்க மறுப்பவன் பாவியாவான். ஏனென்றால் விருந்தை ஏற்காதவன் அல்லாஹ் ரசூலுக்குமாறு செய்தவன் ஆவான் என்றும் நபி (ஸல்) அவர்கள் நவின்றுள்ளார்கள்.

செல்வர்கள் அழைக்கப்பட்டு, ஏழைகள் விடப்படுகின்ற வலீமாதான் (விருந்து தான்) விருந்துகளிலேயே மிகக் கெட்டதாகும் என்று நபி (ஸல்) நவின்றார்கள்.

எனவே வலீமாவில் சீமான்களை மட்டும் கவனித்து விருந்து கொடுப்பதைத் தவிர்த்துக்கொள்ள வேண்டும். முஸ்லிம்கள் என்னும் போது அவர்கள் ஏழைகள், செல்வர்கள் என்று வேறுபாடுகள் காண்பது அல்லாஹ்வுக்கும், அவனின் தூதருக்கும் முற்றிலும் மாற்றமான – சுன்னத்திற்குப் புறம்பான செயலாகும். சுன்னத்து என்று பார்த்தால் உறவினர்களுக்கு மட்டும் தனிப்பட்ட முறையில் விருந்து வைப்பதாகும்.

பொது விருந்தில் ஏழை-செல்வர் என்றெல்லாம் பார்க்கக் கூடாது. ஆலிம்களை கவனித்தால் அவர்களிலும் ஏழை வசதியுள்ளவர் என்றெல்லாம் பார்க்கக் கூடாது. நண்பர்கள் என்று எடுத்துக்கொண்டாலும் நட்பை மட்டுமே கவனிக்க வேண்டும். அவர்களிலும் ஏழை-செல்வர் என்பதைக் கவனிக்கக் கூடாது.

வேதனை என்னவென்றால், ஏழைகளிடம் நட்புகொள்ளவும் மறுக்கின்றனர். உறவினர்களில் ஏழைகள் இருப்பின் அவர்களைப் புறக்கணித்து விடுகின்றனர். இன்றைக்கு

இத்தகைய நிலையெல்லாம் முஸ்லிம்களிடம் பரந்து காணப்படுகின்றன. இவை யாவும் வேதனையளிக்கும் செய்தியாகும். அல்லாஹ்வே! நீ தான் இம்மக்களுக்கு நேர்வழி காட்டியருளவேண்டும்.

## 16. ஹழரத் ருகைய்யாவின் இறப்பு

இஸ்லாத்தின் பகைவர்களான குஃப்பார்களின் கொடுமைகளின் காரணமாக, நபி (ஸல்) அவர்களும் தோழர்களும் மதீனாவிற்கு வந்துவிட்டனர். மதீனாவின் காற்று கடுமையாக இருந்த காரணத்தால் பலருக்கு ஏற்றுக்கொள்ளவில்லை. அதனால் பலருக்கு காய்ச்சல் வந்து விட்டது.

நபி (ஸல்) அவர்களும் நோயுற்று விட்டார்கள். பின்னர் நபிகளாரின் பரக்கத்தால் நற்காற்று வீசத் தொடங்கியது.

மதீனாவில் ஹழரத் அபூபக்ர் (ரலி)வும், ஹழரத் உஸ்மான் (ரலி)வும் இஸ்லாத்திற்கும், முஸ்லிம்களுக்கும் பெரும் உதவிகள் செய்தனர். மதீனாவிற்கு வந்த பின்னும் முஷ்ரீகீன்களாகிய இணை வைத்து வணங்குவோர் இஸ்லாத்தில் இணைந்தவர்களுக்குப் பல்வேறு துன்பங்களைக் கொடுத்து வந்தனர்.

அவர்களுக்காக நபி (ஸல்) அவர்கள் சண்டை செய்யவும் நேர்ந்தது. உதாரணமாக, நபி (ஸல்) அவர்கள் தாங்கள் காலமாகும் வரையிலும் ஏறத்தாழ இருபத்தைந்து போர்கள் ஸஹாபாக்களுடன் இணைந்து செய்திருந்தனர். ஐம்பது போர்களுக்குத் தாங்கள் செல்லாமல் தோழர்களை ஈடுபடுத்தினார்கள்.

இவ்வாண்டும் ஏறத்தாழ பதினைந்து போர்கள் நிகழ்ந்தன. அதே ஆண்டு பத்ர்போரும் நடந்தது. இப்போரில் தான் அபூஜஹ்லும் அபூலஹபும் கொல்லப்பட்டனர். இப்போரின் பொழுதுதான் ஹழரத் ருகைய்யா (ரலி) அவர்கள் நோயுற்றார்கள். அதற்காக நாயகம் (ஸல்) அவர்கள் ஹழரத் உஸ்மான் (ரலி) அவர்களை ருகைய்யா (ரலி) அவர்களைக்

கவனித்துக்கொள்ளும் பொருட்டு மதீனாவிலேயே தங்குமாறு கூறினார்கள். எனவே அவர்கள் போரில் கலந்து கொள்ள இயலவில்லை.

எனினும் அவர்களுக்கு 'கனீமத்' என்னும் போரில் கிடைத்த பொருளில் பங்குக் கிடைத்தது. நபி (ஸல்) அவர்கள் போரில் வென்ற பின்னர் வெற்றிச் செய்தியை மதீனாவில் உள்ளவர்களுக்கு அறிவிக்க ஜைதுப்னு ஹாரிஸா(ரலி) அவர்களை அனுப்பி வைத்தார்கள்.

அவர்கள் மதீனாவிற்கு வரவும் ஹலரத் ருகைய்யா (ரலி) அவர்கள் இறந்து அடக்கம் செய்யப்பட்டு விட்டனர். நபி (ஸல்) வீட்டு பெண்களெல்லாம் அழுது கொண்டிருந்தனர். ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் ருகைய்யா (ரலி) அவர்களின் கப்ருக்கு அருகே, நபி (ஸல்) அவர்களுக்கு சமீபமாக உட்கார்ந்து அழுது கொண்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் தங்கள் ஆடையினால் பாத்திமா (ரலி) அவர்களின் கண்களில் வழிந்தோடிய நீரைத் துடைத்து விட்டார்கள். அதே போரில் தான் ஜுல்ஃபிகார் என்னும் வாளும் கிடைக்கப்பெற்றது. அதை நபிகளார் (ஸல்) தங்களுக்காக வைத்துக் கொண்டனர்.

பின்னர் அந்த வாளை கந்தக் போரின்பொழுது ஹலரத் அலீ (ரலி) அவர்களுக்குக் கொடுத்துவிட்டனர். பதர்போரில் பல குஃப்பார்களைக் கைது செய்து மதீனாவிற்குக் கொண்டு வந்தனர். அவர்களுள் நபிகள் (ஸல்) அவர்களின் மகளார் ஜைனப் (ரலி)வின் கணவர் அபுல் ஆஸும் இருந்தார். அவரும் ஜைனபும் மக்காவில் இருந்து வந்தனர்.

மக்காவாசிகள் கைதிகளை விடுவிடுக்க ஃபித்யா என்னும் பிணைப்பணம் அனுப்பியிருந்தனர். அபுல்ஆஸை விடுவிப்பதற்காக அவரின் மனைவியான ஜைனப் (ரலி) அவர்களும் ஒரு மாலையை நபி (ஸல்) அவர்களிடம் அனுப்பிய வைத்தார்கள். அந்த மாலை அன்னை கதீஜா (ரலி) அவர்கள் ஜைனப் அவர்களுக்குக் கொடுத்த சீர்வரிசையில் ஒன்றாகும். நபி (ஸல்) அவர்களுக்கு அந்த மாலையைக் கண்டதும் கதீஜா (ரலி) அவர்களின் நினைவு வந்துவிட்டது. அவர்களுடன்

வாழ்ந்திருந்த காலத்தையும் அவர்கள் இஸ்லாத்துக்குச் செய்த பேருதவிகளும் எழுந்து கவலையுற்ற நிலையில் தம்தோழர்களைப் பார்த்து உங்களுக்கு விருப்பமிருந்தால் ஜைனப் (ரலி)வின் கணவர் அபுல் ஆஸை விட்டு விட்டு மாலையையும் திருப்பி அனுப்பிவிடுங்கள் என்று கூறியதும், தோழர்கள் நல்லதென்று கூறி பின்னர் அபுல் ஆஸை விடுதலைச் செய்து மாலையையும் திருப்பி அனுப்பப்பட்டது.

அபுல் ஆஸ் செல்லும்போழுது ஜைனப் (ரலி)யை அனுப்பி வைக்குமாறு நபி (ஸல்) அவர்கள் வாக்குறுதி கேட்க, அவரும் அனுப்பி வைப்பதாக ஒப்புக்கொண்டார்.

- ரவ்ளத்துல் அஹ்பாப்-மதாரிஜுந்நுபுவ்வத்

பின்னர் நபி (ரலி) அவர்கள் ஜைனதுப்னு ஹாரிஸா (ரலி)வையும் மற்றொரு அன்சாரி தோழரையும் அனுப்பி வைத்தனர். அவ்விருவரும் 'பதனுயாஜீஜ்' என்னும் இடம் சென்று தங்கினார்கள். ஜைனப் (ரலி) அவ்விடம் வந்ததும் அவர்களை அழைத்துக்கொண்டு மதீனாவிற்கு வந்தனர்.

- மிஷ்காத் ஷரீஃப் வ மதாரிஜுந்நுபுவ்வத்

## 17. ஹிஜ்ரீ மூன்றாம் ஆண்டு இமாம் ஹஸன் பிறப்பு

ஹிஹஜ்ரீ மூன்றாம் ஆண்டு ரமளான் மாதம் நடுவில் ஹலரத் இமாம் ஹஸன் பிறந்தனர். அந்தப் பேறு காலம் முடுகியபொழுது நபி (ஸல்) அவர்கள் அஸ்மா பின்த்து உமைஸையும், உம்மு சுலைமையும் அழைத்து நீங்கள் பாத்திமா (ரலி)வின்) பேறு காலம் பார்க்கச் செல்லுங்கள். குழந்தைப் பிறந்ததும் வலது காதில் பாங்கும், இடது காதில் இகாமத்தும் சொல்லுங்கள். ஏனென்றால் அதனால் குழந்தை ஷைத்தானை விட்டும் பாதுகாக்கட்டும். வேறு பேச்சு எதனையும் பேசாதீர்கள் நான் வந்து விடுகிறேன் என்றனர். அவ்விருவரும் பேறு காலம் பார்க்க அன்னை பாத்திமா (ரலி)வின் இல்லம் சென்றனர்.

குழந்தை பிறந்ததும், நபி (ஸல்) அவர்கள் கூறியவாறே

செய்தனர். பின்னர் நபி (ஸல்) அவர்கள் அங்கு வந்து தாங்கள் தொப்பூளை அறுத்து தங்கள் முபாரக்கான உமிழ்நீரை ஹஸன் (ரலி)வின் வாயில் வைத்து அல்லாஹும்ம இன்னீ உயீ துஹவை வ துர்ரிய்யத்தஹு மினஷ் ஷைத்தானிர்ரஜீம், இறைவா! இவரையும் இவரின் வழித்தோன்றலர்களையும் ஷைத்தானின் தீங்கை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன் என்றார்கள்.

ஏழாம் நாள் நபி (ஸல்) அவர்கள் 'குழந்தைக்கு என்ன பெயர் இடப்பட்டது' என்று வினவ, ஹர்பு எனக் கூறப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் 'இப்பெயர் வேண்டாம்; ஹஸன் என்று பெயர் வையுங்கள் என்றனர். பின்னர் நபி (ஸல்) அவர்கள் அன்றைக்கே ஹலரத் ஹஸன் அவர்களுக்காக இரண்டு ஆடுகள் அறுத்து அகீககா கொடுத்தார்கள்.

அதன் ஒரு தொடையை மருத்துவச்சிக்கு (தாயா)வுக்குக் கொடுத்தார்கள். பாத்திமா (ரலி) அவர்களிடம் குழந்தைக்குத் தலைமுடி இறக்கி அதன் எடைக்கு வெள்ளியை சதகா செய்யுமாறு கூறினார்கள்.

மேலும் அன்றைக்கு ஹலரத் இமாம் ஹஸனுக்கு க்தனாவும் செய்யப்பட்டது. இன்னும் இமாம் ஹஸனுக்கு ஹலரத் அப்பாஸின் மனைவி உம்முல் ஃபள்லு பால் கொடுத்து வந்தனர். - நூருல் அப்ஸார்

இதே ஆண்டில் தான் நபி (ஸல்) அவர்கள் (ருகைய்யாவின் மரணத்திற்குப்பின்) உம்முல்குல்தூம் (ரலி)வை ஹலரத் உஸ்மான் (ரலி) அவர்களுக்கு மணமுடித்துக் கொடுத்தார்கள். மேலும் நபி (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களின் மகளார் ஹஃப்ஸா (ரலி) அவர்களையும், குஸைமா (ரலி) வின் மகளார் ஜைனப் (ரலி)வையும் திருமணம் முடித்தார்கள்.

- மதாரிஜுந்நுபுவ்வத்

மஸ்அலா : பிள்ளைப் பிறந்த ஏழாவது, பதினான்காவது. இருப்பதோராவது நாளில் அல்லது ஏழாவது, பதினான்காவது மாதங்களில் அல்லது ஏழாவது, பதினான்காவது ஆண்டில் அதாவது ஆண் குழந்தையாக இருப்பின் இரண்டு ஆடுகளும்

பெண் குழந்தையாக இருப்பின் ஓர்ஆடும் அறுத்து 'அகீகா' கொடுப்பது சுன்னத்.

ஆண் குழந்தைக்கு ஓர் ஆடு கொடுப்பினும் கூடும். குர்பானி கொடுப்பதற்கு எதுவெல்லாம் கூடுமோ அதுவெல்லாம் 'அகீகா' வுக்கும் கூடும். அதாவது எந்தக் குறைபாடுள்ள விலங்குகள் குர்பானிகொடுக்க ஆகாதோ, அதுவே 'அகீகா' வுக்கும் உரிய சட்டமாகும்.

ஆனால் 'அகீகா' வில் அதன் தலையை முடி இறக்கியவனுக்கும் ஒரு தொடையை மருத்துவச்சிக்கும் கொடுப்பது முஸ்தஹப்பாகும்; கொடுக்காவிட்டாலும் குற்றமில்லை. 'அகீகா' இறைச்சியை குர்பானி இறைச்சியைப் போன்றே பயன்படுத்தவேண்டும்.

இனிப்பு அல்லது புளிப்புச் சேர்த்து சமைக்கவேண்டும். அந்த இறைச்சியை சமைத்தோ சமைக்காமலோ தர்மம் (சதகா) கொடுக்கலாம். பெற்றோர் இதனை உண்ணலாம் இனி. 'அகீகா' வின் தோல் குர்பானியின் தோல் போன்றேயாகும். அதாவது அதைப்பாடம் செய்து தமக்கு விருப்பமானதைச் செய்துகொள்ளலாம். தோலைப் புதைப்பது பொருளை வீணாக்கிடும் செயலாகும்.

அடுத்து எவர்மீது குழந்தைக்கு 'நஃபகா' செலவினங்களுக்குக் கொடுப்பது கடமையோ அவரின் சொத்திலிருந்தே குழந்தைக்கு 'அகீகா' கொடுக்க வேண்டும். தந்தை ஏழையாக இருந்து, தாய் வசதி படைத்தவளாக இருப்பின் அவளே குழந்தைக்கு 'அகீகா' கொடுக்க வேண்டும்.

'அகீகா' கொடுக்கும்பொழுது இந்த துஆவை ஓதவும், அல்லாஹும்ம ஹாதிஹீ அதீகத்து இப்னீ ஃபுலானின் தமுஹா பிதமிஹீ வலஹ்முஹா பிலஹ்மிஹீ வ அள்முஹா பிஅள்மிஹீ வஜில்துஹா பிஜில்திஹீ வஷஃருஹா பிஷஃரிஹீ அல்லாஹும் மஜ்அல்ஹு ஃபிதாஅன் லிஇப்னீ மினன்னார் பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர்.

ஃபுலானின் என்னுமிடத்தில் குழந்தையின் பெயரைச் சொல்ல வேண்டும். 'அகீகா' செய்த பின்னர் குழந்தையின்

முடியை இறக்கி அதன் எடைக்கு வெள்ளி அல்லது பொன் போன்றவற்றால் சதகா கொடுக்க வேண்டும்.

மேலும் 'குழந்தைக்கு பெயர் ஏழாம் நாளே வைக்க வேண்டும். பெயர்கள் அல்லாஹ்-ரசூலுடைய பெயர்களைக் கொண்டதாக இருக்க வேண்டும். உதாரணமாக அப்துல்லாஹ், அப்துர்றஹ்மான், அப்துர்றஹீம் போன்றவற்றையும் முஹம்மது அஹ்மது என்னும் பெயர்களையும் வைப்பது சிறப்பு. (வெறும் முஹம்மது அஹ்மது என்று பெயர் வைக்கக் கூடாது. முஹம்மதுஹஸன், அஹ்மது கபீர் என்றிருக்க வேண்டும்.

ஆனால் அப்துந் நபி, குலாமுந் நபி, அப்துல் முனாஃப் இவைபோன்ற பெயர்களைப் பிள்ளைகளுக்கு வைக்கக் கூடாது. மேலும் ஷம்சுத்தீன், நூருத்தீன், முஹ்யித்தீன் போன்ற தற்புகழ்ச்சிக்குரிய பெயர்களையும் வைக்க வேண்டாமென்று சில உலமாக்கள் கூறுகின்றார்கள். மேலும் கைருன்னிஸா, ஷர்ஃபுன்னிஸா போன்ற பெயர்களையும் வைக்கலாகாது. மேலும் அப்துர்றஹ்மான், அப்துர்றஹீம், அப்துல் கரீம் போன்ற பெயர்களில் உள்ள ரஹ்மான், ரஹீம், கரீம் என்று தனித்துப்பெயர்களை அழைக்கக்கூடாது.

மேலும் குழந்தைப் பிறந்ததும் வலக்காதில் பாங்கும், இடக்காதில் இகாமத்தும் சொல்லியபின் பேரீத்தம் பழம் அல்லது ஏதேனும் இனிப்பான பொருளைக் குழந்தையின் மேல் முரசில் தடவுவது முஸ்தஹப்பாகும்.

அடுத்து குழந்தைகள் பேசத் துவங்கினால், கலிமா தய்யிபா, பிஸ்மில்லாஹ் கற்றுக்கொடுக்க வேண்டும். கத்னா செய்வது சுன்னத்தாகும். அதற்குரிய முஸ்தஹப்பானகாலம் ஏழு வயதில் இருந்து பத்து வயது வரையும் என்றும் இன்னும் சிலர் பிள்ளைப் பிறந்து ஏழாம் நாளிலிருந்து என்றும், சிலர் பன்னிரண்டு வயது வரை என்றும் கூறுகின்றார்கள்.

## 18. செய்யக் கூடாதவை

இன்றைக்கு மக்கள் 'கத்னா' வில் வீணான, தேவையற்ற வீண் செலவுகளைச் செய்து வருகின்றனர். இதிலிருந்து விடுபடுவது அவசியமாகும். இது போன்றே குழந்தைகளுக்கு முடி இறக்கும்போது அனாச்சாரமான செயல்களையெல்லாம் செய்கின்றனர். இவ்வாறெல்லலாம் செலவு செய்வதற்கு மார்க்கத்தில் அனுமதி இல்லை.

அல்லாஹ்விற்கும் அவனின் தூதருக்கும் பொருத்த மற்ற செயல்களை விட்டும் நீங்கி நபி (ஸல்) அவர்கள் காட்டிச் சென்ற வழிமுறைகளின்படி நடப்பதே முஸ்லிம்களுக்குரிய கடமையாகும்.

## 19. உஹது போரில் அன்னை பாத்திமா (ரலி)

ஹிஜ்ரீ மூன்றாமாண்டு பல போர்கள் நிகழ்ந்தன. அவற்றுள் உஹது போரும் ஒன்றாகும். உஹது மலைக்கு அருகே முஸ்லமிகளுக்கும் காஃபிர்களுக்கும் மத்தியில் போர் மூண்டது. அப்போரில் ஆரம்ப நிலையில் முஸ்லிம் வெற்றிபெற்றனர்; பின்னர் தோல்விடைய நேரிட்டது. அப்போரில் நபி(ஸல்) அவர்களும் காயமுற்றதுடன் அவர்களின் முன் பல்லும், ஷஹீதானது. ஷைத்தான், நபி (ஸல்) அவர்கள் போரில் இறந்துவிட்டதாகக் கூச்சலிட்டான். இக்கூச்சல் கேட்டு தோழர்கள் திகைப்புற்றனர்.

ஆனால் ஹலரத் அபூபக்ர் (ரலி), உமர் (ரலி), அலீ (ரலி) தல்ஹா (ரலி) உஸைத் (ரலி) முதலியோர் துணிவுடனேயே இருந்தனர். ஷைத்தானின் பேரிரைச்சல் மதீனாவரையும் கேட்கலாயிற்று! ஹலரத் பாத்திமா (ரலி) களம் நோக்கி வந்தனர். வந்தவர்கள் வள்ளல் நபி (ஸல்) அவர்களின் நிலையறிந்து அழலாயினர். மேலும் அண்ணலாரைக் கட்டிப்பிடித்தும் அழலாயினர். பெருந்துயர் கொண்டனர் அன்னை பாத்திமா (ரலி).

நபி (ஸல்) அவர்களின் முகத்திலும் தலையிலும் படிந்திருந்த இரத்தத்தைக் கழுவிக்கொண்டிருந்தார்கள். ஹலரத் அலீ (ரலி)

கேடயத்தில் நீர் மொண்டு வந்து கொடுத்தார்கள். எனினும் இரத்தம் நிற்கவில்லை. பின்னர் ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் துண்டுப்பாயை நெருப்பிலிட்டுக் கரித்து, சாம்பலைக் காயத்தின் மீது வைத்து அழுத்தினார்கள். இப்போரில் பெரும்பாலான நபித்தோழர்கள் ஷஹீதானார்கள் ஹலரத் ஹம்ஸா (ரலி) அவர்களும் இப்போரில்தான் ஷஹீதானார்கள்.

மேலும் அவர்களின் காது மூக்கு போன்ற உறுப்புகளும் அறுக்கப்பட்டிருந்தன. நபி (ஸல்) அவர்கள் ஹம்ஸா (ரலி) வின அருகில் சென்று அவர்களுக்கு ஏற்பட்டுவிட்ட இந்நிலைக்காக மிகவும் அழுதனர். ஹலரத் ஹம்ஸாவின் சகோதரி ஸஃபிய்யா (ரலி) வைப்பார்க்கக் கூடாது என்று நபி (ஸல்) தடுத்துவிட்டனர். ஆனால் அவர்கள் பொறுமையை மேற்கொள்வதாக வாக்குறுதியளித்தனர். பின்னர் ஹம்ஸா (ரலி)வின் அருகில் வந்து பார்த்தபொழுது, தம் சகோதரரின் கோரநிலை கண்டு பொறுக்க இயலாமல் அழத் தொடங்கினார்கள். அவர்கள் அழுவதைக் கண்ணுற்ற நபி (ஸல்) அவர்களும் பாத்திமா (ரலி) வும் அழுதனர்.

- ரவ்ளத்துல் அஹ்பாப் –மதாரிஜுந்நுபுவ்வத்

## 20. இமாம் ஹுஸைன் (ரலி) பிறந்தார்கள்

அதே ஹிஜ்ரீ நான்காம் ஆண்டு ஷஃபான் மாதம் ஐந்தாம் நாள் ஹலரத் ஹுஸைன் (ரலி) பிறந்தார்கள். அவர்கள் பிறந்ததும் நபி (ஸல்) அவர்கள் தங்கள் உமிழ்நீரை அவர்களின் மேல் முரசில் தடவியபின் காதில் பாங்கும் இகாமத்தும் கூறினர்.

பின்னர் இரண்டாம் முறையாகத் தம உமிழ்நீரை வாயில் இட்டு துஆச் செய்தார்கள். ஏழாம் நாள் ஹுஸைன் என்று பெயரிட்டனர். மேலும் ஓர் ஆடு அறுத்து 'அகீகா' கொடுத்த பின்னர் பாத்திமா (ரலி)வை நோக்கி ஹுஸைனுக்குத் தலை முடிஇறக்கி ஹஸனுக்குச் செய்ததுபோல் அம்முடியின் எடைக்கு வெள்ளியை சதகா செய்யுங்கள்! என்றனர். - நூருல் அப்ஸார்

## பாத்திமா (ரலி) ஓதிய ஸலவாத்து

ஒரு நாள் ஷைகு அப்துல் அஜீஸ் தப்பாயி (ரஹ்) என்னும் பெரியார் தம் கனவில் நபி (ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் ஒரு மஜ்லிஸில் இருப்பது போன்றும் மேலும் ஹலரத் பாத்திமா (ரலி) வும் அந்த அவையில் இருந்தது போன்றும் பாத்திமா (ரலி) அவர்கள் கீழ்வரும் ஸலவாத்தை ஓதியது போன்றும் கண்டார்கள். இது 'ஸஆதத்துத் தாரைனி ஃபிஸ்ஸலாத்தி அலா செய்யிதில் கவ்னைனி' என்னும் கிதாபில் எழுதப்பட்டுள்ளது.

"அல்லாஹும்ம ஸல்லி அலாமன்ரூஹுஹு மிஹ்ராபுல் அர்வாஹி-வல்மலாயிகத்தி-வல்கவ்னி.

அல்லாஹும்மஸல்லி-அலா மன் ஹுவ இமாமுல் அன்பியாயி-வல்முர்ஸலீன.

அல்லாஹும்ம ஸல்லி-அலாமன்ஹுவ இமாமு அஹ்லுல் ஜன்னத்தி - இபாதில்லாஹில் முஃமினீன்.

## 21. அன்னையாரின் எளிய நிலை

ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் தம் திருமகளார் பாத்திமா (ரலி)வின் இல்லம் வந்தனர். அது சமயம் அன்னையவர்கள் ஒட்டகத்தின் முடியினால் ஆன ஒரு முரட்டுத் துணியை (ஆடையை) அணிந்தவர்களாக அமர்ந்திருந்தனர். அதைப் பார்த்து நபி (ஸல்) அவர்களின் கண்கள் கலங்கின. பிறகு மகளை நோக்கி பாத்திமா 'இவ்வுலகத் துன்பங்களை இன்று பொறுத்துக்கொண்டால் நாளை மறுமையில் சுவர்க்கத்தின் அருட்கொடைகளும், நலன்களும் உமக்குக்கிடைக்கும்' என்று கூறினர்.

- மதாரிஜுந்நுபுவ்வத்

ஒருநாள் ஹலரத் அலீ (ரலி) அவர்கள் பாத்திமா (ரலி) வை நோக்கி, "நான் கிணற்றில் நீர் எடுத்தெடுத்து அலுத்து விட்டேன்" என்று கூற பாத்திமா (ரலி)வும் 'நானும் கோதுமை அரைத்து அரைத்து அலுத்துப்போய்விட்டேன்' என்றனர்.

ஹலரத் அலீ (ரலி) கூறுகின்றார்கள்; பாத்திமா (ரலி) என்வீட்டின் அடுப்படியில் அமர்ந்து ரொட்டிச் சுட்டுக்கொண்டு தொலிக் கோதுமை அரைத்தும் வீட்டைப் பெருக்கியும் வருவதால், பாத்திமாவின் முகம் பேதலித்து விட்டது. மேலும் அவரின் கைகளில் காய்ப்புக் காய்த்துவிட்டன. (குழும்புகள் உண்டாகிவிட்டன) அவரின் உடலில் புழுதிகள் படர்ந்திருந்தன. எனவே அவரை நோக்கி நான் 'பாத்திமா! நபி (ஸல்) அவர்களிடம் சில அடிமைகள் கைதிகளாக வந்துள்ளனர். எனவே நீர் அவர்களிடம் சென்று ஒரு பணியாளைக் கேட்பீராயின் நன்றாக இருக்கும்' என்று கூறினேன்.

பாத்திமா (ரலி) அவர்கள் நபி (ஸல்) வீட்டிற்குச்சென்றனர். அதுபொழுது நபி (ஸல்) வீட்டில் இல்லை. ஆயிஷா (ரலி) அவர்களிடம் செய்தியைக் கூறிவிட்டு வந்து விட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் வீட்டிற்கு இரவு வந்தார்கள்.

ஹலரத் ஆயிஷா (ரலி) அவர்கள் பாத்திமா (ரலி) பணியாள் கேட்டு வந்த செய்தியை நபிகள் (ஸல்) அவர்களிடம் கூறினர். இதைச் செவியுற்ற நபி (ஸல்) அவர்கள் அப்பொழுதே பாத்திமா (ரலி)வின் இல்லம் வந்தனர்.

அது சமயம் ஹலரத் அலீ (ரலி) வும், பாத்திமா (ரலி)வும் விரிப்பில் இருந்தனர். நபிகளாரின் வருகையைக்கண்டு எழுந்திட முயன்றனர். உடனே நபி (ஸல்) அவர்கள் அவர்களை ஏழ வேண்டாம் என்று கூறி இருவரின் தலைமாட்டின் பக்கம் வந்து இருவருக்கும் மத்தியில் காலை நீட்டி அமர்ந்தனர்.

ஹலரத் அலீ (ரலி) கூறுகின்றார்கள்; நபி (ஸல்) அவர்களின் பாதம் பட்டதால் அதே சமயம் என் உள்ளத்தில் மகிழ்ச்சியுண்டானதாகத் தெரிந்தது. பின்னர் நபி (ஸல்) அவர்கள் ஹலரத் பாத்திமா (ரலி)வை நோக்கி, நீர் ஒரு பணியாளுக்காக என் வீட்டிற்கு வந்தீர்களா? எனக்கேட்க அதற்குள் நான், 'நான் தான் அவர்களை அனுப்பினேன்' எனச் சொன்னேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "அஹ்லுஸ்ஸுஃப்பா, என்னும் ஏழைகள் பசியால் துடித்துக் கொண்டிருக்கும் பொழுது அவர்களின் நிலையைக்

கவனிக்காமல் உங்களுக்கு கொடுக்க இயலாது" எனக் கூறிவிட்டு, நான் பணியாட்களை விடச் சிறந்த ஒன்றைக் காண்பித்துக் கொடுக்கிறேன். நீங்கள் படுக்கச் செல்லும்பொழுது சுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹி அல்லாஹு அக்பர் என்று முப்பத்து மூன்று ஓதுங்கள்; அவையே பணியாளை விட பயனுள்ளதாயிருக்கும் என்றார்கள்.

மேலும் ஹலரத் அலீ (ரலி) கூறுகின்றார்கள். அன்றிலிருந்து வழக்கமாக அதனைக் கூறிவருகின்றேன். பின்னர் எப்பொழுது அதை ஓதுவதை விட்டதில்லை.

(இதன் காரணமாகவே இத்தஸ்பீஹுக்கு தஸ்பீஹ பாத்திமா (ரலி) என்னும் பெயர் வழங்கலாயிற்று.)

- புகாரீ ஷரீஃப், ரவ்ளத்துல் அஹ்பாப்

## அல்ஹதீஸ்

ஒரு நாள் ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் சுப்ஹு தொழுகைக்கு நேரம் கடந்து வந்தனர். நபி (ஸல்) அவர்களிடம் 'யாபிலால் ஏன் நேரங்கழித்து வந்தீர்?' என்று வினவினர். அதற்கு பிலால் "நான் பாத்திமா (ரலி) வின் இல்லம் சென்றிருந்தேன். அவர்கள் திருகையில் (மாவு) அரைத்துக் கொண்டிருந்தார்கள். குழந்தை அழுதுகொண்டிருந்தது. அப்பொழுது நான் பாத்திமா (ரலி) இடம் நான் திருகையில் மாவு அரைக்கிறேன் அல்லது குழந்தையைக் கவனித்துக்கொள்கிறேன் எனக்கூறினேன்.

அவர்கள் நான் குழந்தைக்கு உரிமையுள்ளவராகயிருக்கிறேன். நான் குழந்தையைக் கவனித்துக் கொள்கிறேன் என்று கூறினார்கள். நான் திருகையை அரைத்தேன். பாத்திமா (ரலி) அவர்கள் குழந்தை அழாமல் கவனித்துக் கொண்டார்கள்; நான் நேரங்கழித்து வந்ததற்கு இதுதான் காரணம்' எனக் கூறினார்கள்.

- இஸ்அஃபுர்ராகிபீன்

அல்ஹதீஸ்

நபி (ஸல்) அவர்களிடம் ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் வந்து "அல்லாஹ்வின் தூதரே! எனக்கும் என் கணவருக்கும் ஆட்டுத்தோலைத் தவிர விரிப்பேதும் கிடையாது. அதில் தான் இரவில் படுத்துக்கொள்கிறோம். இன்னும் அதிலே தான் பகலில் ஒட்டகத்திற்குத் தீனி வைக்கின்றோம்" என்று முறையிட்டனர்.

அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் யாபுனைய்யத்த இஸ்பிரீ-ஃபஇன்ன மூஸா பின் இம்ரான்-அகாம மஅ இம்ரஅத்திஹீ அஷ்ரஸினீன-மாலஹா ஃபிரஷுன் இல்லா அபாஅத்துன்-கதரானிய்யத்துன்.

ஹலரத் மூஸா (அலை) அவர்கள் தங்கள் மனைவியுடன் பத்தாண்டு காலம் தங்கியிருந்தார்கள். அவர்களிடம் 'கதிரான்' நாட்டு கம்பளியைத் தவிர வேறொன்றும் இருக்கவில்லை என்றார்கள். - ஜுர்கானி

## 22. அன்னை பாத்திமா (ரலி)வின் கொடைத்தன்மை

இமாம் ஹஸனும் ஹுஸைனும் (ரலியல்லாஹு அன்ஹுமா) சிறுகுழந்தையாக இருந்தபொழுது அவ்விருவரும் நோயுற்றிருந்தனர். நபி (ஸல்) அவர்கள் நோய் வினவிடச் சென்றனர். ஹலரத் அபூபக்ர் சித்தீக் (ரலி)வும் ஹலரத் உமர் இப்னு கத்தாப் (ரலி)வும் அண்ணலாருடன் இருந்தனர். அப்பொழுது ஹலரத் உமர் (ரலி) அவர்கள் ஹலரத் அலீ (ரலி) வைப் பார்த்து யா அலீ உங்கள் குழந்தைகளுக்காக நேர்ச்சை செய்து கொள்ளுங்கள்; அல்லாஹ் அவர்களுக்கு நலமளிப்பான் என்றனர்.

அதற்கு ஹலரத் அலீ (ரலி) 'நான் நன்றி கூறிட மூன்று நோன்புகள் நோற்பேன்' என்றனர். அப்பொழுது ஹலரத் பாத்திமா (ரலி) அவர்களும் ஹஸன் (ரலி)வும், ஹுஸைன் (ரலி)வும் நாங்களும் மூன்று நோன்புகள் நோற்போம் என்றனர். அல்லாஹ்வின் உதவிகொண்டு நலம் பெற்றனர்.

- அல்ஹதீஸ்

ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் ஹலரத் பாத்திமா (ரலி) நோயுற்றிருந்தபொழுது நோய் வினவச் சென்றனர். மகளே, எப்படியிருக்கிறது? எனக் கேட்க, ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் 'எனக்கு நோய் அதிகமாகிக் கொண்டே வருகிறது; எனக்கு உண்ண உணவேதுமில்லை' என்று கூறினர். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் "என் மகளே! நீர் சுவனப் பெண்களின் தலைவியாக விருப்பதை விரும்பவில்லையா?" எனக்கேட்டார்கள். அப்பொழுது ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் 'தந்தையே! அவ்வாறாயின், மரியம் (அலை) அவர்களுக்குரிய பதவி யாது? என வினவினர். அதற்கு நபி (ஸல்) அவர்கள்; மரியம் (அலை) அவர்கள் காலத்துப்பெண்களுக்கு அரசியாவார்கள் என்றனர்.

நபி (ஸல்) அவர்கள் நவின்றனர்; பசித்தோர்க்கு உணவு அளியுங்கள்; நோயாளரிடம் சென்று நோய்வினவுங்கள்; மேலும் சிறைபட்டோரை பொருள்கொடுத்து மீட்டு வாருங்கள்"

இக்கால மக்கள் நோயாளிகளை வினவுவதுமில்லை; அதனைக் குறைகூறி பழிக்கின்றனர். நபி (ஸல்) அவர்கள் இது குறித்து பல முறை வற்புறுத்திக் கூறியுள்ளனர். நேயாளிகளிடம் சென்று நோய் வினவும் முறைகளையும் கற்றுக்கொடுத்துள்ளனர். அதாவதுநோய் வினவச் சென்றால் நோயாளிக்கு அச்சம் ஏற்படுத்திவிடக் கூடாது. அவன் முன் அமர்ந்து தலையை ஆட்டக் கூடாது. மேலும் நீ இவ்வளவு வேதனையில் இருக்கிறாயே! என்றும் கூறக்கூடாது. நோயாளிக்கு மகிழ்ச்சி ஏற்படும் வண்ணம் ஆறுதல் மொழிகளைக் கூறிட வேண்டும். முன்பு பார்த்ததைவிட இப்பொழுது நன்றாக இருக்கிறாய்!`என்று கூற வேண்டும். மேலும் அல்லாஹ்வின் அருளின்மீது ஆதரவு வைக்கத்தக்க நல்ல பேச்சுக்களைப் பேச வேண்டும்.

நோயாளியின் தலையில் கை வைக்கக்கூடாது. ஆனால் தன் தலையில் கை வைக்க அவன் விரும்பினால் தவறல்ல. நோயாளியைச் சந்தித்தால் இப்பொழுது எப்படியிருக்கிறது? என்று வினவ வேண்டும். அவனிடம் வஸிய்யத்செய் எனக்

கூறக்கூடாது. மேலும் வஸிய்யத்துச் செய்யுமாறு கூறுவது மூடர்களின் வேலையாகும்.

### நோயிலிருந்து நலம் பெற்றனர்

மறுநாள் காலை அனைவரும் நோன்பு நோற்றனர். ஆனால் அவர்களிடம் நோன்பு திறக்க ஏதுமில்லை. இந்நிலையில் தமக்கு அடுத்த வீட்டிலிருந்த ஷம்ஊன் என்னும் யூதனிடம் ஹலரத் அலீ (ரலி) சென்று 'முஹம்மதுடைய மகள் பாத்திமா (ரலி)வுக்கு மூன்றுபடி கோதுமை கூலிக்குக் கயிறு திரிக்க சிறிது முடிகொடுக்கிறாயா?' என்று கேட்டனர்.

அதற்கு அந்த யூதன் 'நல்லது' எனக் கூறி முடிகொடுத்தான். பெற்று ஹலரத் பாத்திமா (ரலி) விடம் கொடுத்தார்கள்.

ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் அதனை மூன்று பகுதிகளாக ஆக்கி, ஒரு பகுதியைத் திரித்து கொடுத்துவிட்டு ஒருபடி கோதுமை வாங்கித் திருகையில் அரைத்து வீட்டிலிருக்கும் ஐந்து பேர்களுக்கு ஐந்து ரொட்டிகள் சுட்டு வைத்து மஃரிப் தொழுது முடித்தார்கள்.

ஹலரத் அலீ (ரலி)வும் மஃரிப் தொழுதுவிட்டு இல்லம் வந்தனர். பசியாறிட சுஃப்ரா விரிக்கப்பட்டது. ஹலரத் அலீ (ரலி) அவர்கள் ஒரு ரொட்டித் துண்டை எடுத்தார்கள். அது பொழுது வீட்டிற்கு வெளியிலிருந்து ஓர் ஏழை ஓ முஹம்மதுடைய வீட்டார்களே! உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும்! நான் ஏழை! நீங்கள் உண்பதில் எனக்கு ஏதாவது கொடுங்கள். அல்லாஹ் உங்களுக்கு சுவர்க்கத்து உணவைக்கொண்டு பசியாற்றுவான்" எனக்குரல் கொடுத்தார்.

இதனைக் கேட்ட ஹலரத் அலீ (ரலி) அவர்கள் தங்கள் வாயருகே கொண்டு சென்ற ரொட்டித்துண்டைக் கீழே விட்டார்கள்.

அன்னை பாத்திமா (ரலி) அவர்கள் உணவு விரிப்பில் வைக்கப்பட்டிருந்த ரொட்டிகளையெல்லாம் குரல் கொடுத்த ஏழைக்கு கொடுத்துவிட்டு, அவ்விரவெல்லாம் பசித்தவர்களாக இருந்தனர். தண்ணீரைத் தவிர வேற எதனையும் உட்கொள்ளவில்லை.

மறுநாளும் நோன்பு நோற்றனர். அன்றும் பாத்திமா (ரலி) அவர்கள் அந்த முடியில் ஒரு பாகத்தை திரித்து ஷம்ஊனிடம் கொடுத்து ஒருபடி கோதுமை வாங்கி அரைத்து முன் போலவே ஐந்து ரொட்டிகள் சுட்டு வைத்தார்கள். ஹலரத் அலீ (ரலி) மஃரிபு தொழுதுவிட்டு வந்தார்களா. பசியாறிட விரிப்பில் அமர்ந்தனர். ஹலரத் அலீ (ரலி) உண்பதற்காக ரொட்டித் துண்டு ஒன்றை எடுத்தார்கள்.

வீட்டின் வெளியே ஓர் அனாதையின் குரல் ஒலிக்கத் தொடங்கியது. ஓ முஹம்மதுவின் குடும்பத்தாரே! நான் ஓர் அநாதை. நீங்கள் உண்பதில் எனக்கும் ஏதாவது உண்ணக் கொடுங்கள். அல்லாஹ் தஆலா உங்களுக்கு சுவர்க்க உணவில் பசியாற்றுவான்.

உடனே ஹலரத் அலீ (ரலி) தங்கள் வாயருகே கொண்டு சென்ற ரொட்டித் துண்டை வைத்து விட்டு ஓ கண்ணியம் பொருந்திய நபி மகளார் பாத்திமாவே! அல்லாஹ் தஆலா இந்த அநாதையை கொண்டுவந்து விட்டிருக்கிறான். எவர் இந்த அநாதைக்குக் கொடுத்து அல்லாஹ்வின் பொருத்தத்தைத் தேடுவார்களோ அவர்களுக்கு நயீம் என்னும் சுவர்க்கம் உண்டாக்கப்பட்டுள்ளது என்னும் கவிதைகளைக் கூறினார்கள். இதைச் செவியுற்ற பாத்திமா (ரலி) அவர்கள் நான் கொடுப்பேன் அலட்சியம் செய்யமாட்டேன். என் குடும்பத்தைவிட அல்லாஹ்வையே தெரிந்தெடுத்துக் கொள்வேன். மேலும், குழந்தைகள் பசியோடிருக்கின்றனர்; அவர்களில் சிறியவர் போரில் ஷஹீதாவார் என்று இந்தக் கவிதைகளைப் பதிலாகக் கூறி விரிப்பில் இருந்தவற்றையெல்லாம் அந்த அநாதைக்குக் கொடுத்து விட்டார்கள். அன்றிரவும் பசியுடனேயே தூங்கிவிட்டார்கள். மறுநாளும் நோன்பு நோற்றனர். பின்னர் ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் மீதியிருந்த முடியைத் திரித்து யூதனிடம் கொடுத்து கோதுமை வாங்கி அரைத்து ரொட்டிச் சுட்டு வைத்தார்கள்.

ஹலரத் அலீ (ரலி) வழக்கம் போல் மஃரிபு தொழுது விட்டு உண்ண அமர்ந்த பொழுது மீண்டும் வாசலில் ஓ முஹம்மதுடைய குடும்பத்தார்களே! குஃப்ஃபார்கள் எங்களைக் கைது செய்து கொடுமைப்படுத்தினர். உண்பதற்கு ஒன்றும் கொடுக்கவில்லை" என்று குரல் கொடுக்கவும் ஹலரத் அலீ (ரலி) அவர்கள் தாங்கள் எடுத்த ரொட்டியை உண்ணாமல் வைத்துவிட்டு தலைமை வாய்ந்த பாத்திமாவே! இதோ குரல் கொடுக்கின்ற கைதி துன்பப்பட்டு வந்துள்ளார். அவர் பசிகாரணமாக முறையிடுகின்றார். அவருக்குப் பசியாற்றுபவர் நாளை மறுமையில் இதன் நன்மையைப் பெற்றுக் கொள்வார். வேளாண்மைச் செய்தவன் ஒரு நாள் அதை அறுத்துக்கொள்வான் என்றனர்.

இக்கவிதைகளைக் கேட்டதும் ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் "கோதுமை ஒருபடிதான் மிச்சமிருந்தது. என் கையெல்லாம் தளர்ந்துவிட்டது. என் குழந்தைகள் இருவரும் மூன்று நாட்களாகப் பசித்திருக்கின்றனர். இரட்சகனே! அவர்களை அழித்துவிடாதே! என்னும் கவிதைகளைப் படித்துவிட்டு இருந்தவற்றையெல்லாம் கைதிகளுக்கு கொடுத்து விட்டார்கள். பின்னர் பசியுடனே எல்லோரும் படுத்துவிட்டனர். மறுநாள் காலை பசியாற்றிட அவர்களிடம் ஏதுமில்லை. ஹலரத் அலீ (ரலி) அவர்களும் இமாம் ஹஸன் (ரலி)வும் இமாம் ஹுஸைன் (ரலி) ஆகிய மூவரும் நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர்.

இமாம்களான ஹஸனும், ஹுஸைனும் பசிக்கொடுமையால் கோழிக் குஞ்சுகள் போன்று துடித்துக் கொண்டிருந்தனர். நபி (ஸல்) அவர்கள் ஹலரத் அலீ (ரலி)வை நோக்கி "யா அலீ உங்கள் நிலை எனக்கு மிக்க வருத்தமாக இருக்கிறது. வாருங்கள் பாத்திமாவிடம் செல்வோம்" என்று கூறி பாத்திமாவிடம் வந்தபொழுது அவர்கள் முஸல்லாவில் அமர்ந்திருந்தார்கள். அவர்களின் முதுகு வயிற்றுடன் ஒட்டியிருந்தது. கண்கள் குழி விழுந்திருந்தன.

நபி (ஸல்) அவர்கள் தம் அருமை மகளாரைக் கழுத்தோடு

கட்டியணைத்துக் கொண்டு "யா அல்லாஹ்! நீ உதவி செய்!' எனக் கேட்டார்கள். உடனே ஜிப்ரயீல் (அலை) இறங்கி இந்தத் திருவசனத்தை ஓதிக் காண்பித்தார்கள்.

"வயுத்யிமூனத்தஆம-அலா ஹுப்பிஹி மிஸ்கீனன்
வ யதீமன்-வஅஸீரன் இன்னமா நுத்யிமுக்கும்
லவஜ்ஹில்லாஹி லாநுரீது மின்க்கும் ஜஸாஅன்
வலாஷுகூரா
இன்னா நகாஃபு-மிர்ரப்பினா-யவ்மன்
அபூஸன்-கம்தரீரா ஃபவகாஹுமு முல்லாஹு
ஷர்ர-தாலிக்கல் யவ்மி-வலக்கா ஹும்
நள்ரத்தன் வசுரூரா

பொருள் : அன்றி அவர்கள் அல்லாஹ்வின் மீதுள்ள அன்பின் காரணமாக ஏழைகளுக்கும், அனாதைகளுக்கும் சிறைபட்டோருக்கும் ஆகாரமளித்தும் வந்தனர். (தானம் பொறுவோரை நோக்கி) "நாம் உங்களுக்கு ஆகாரமளிப்பதெல்லாம் அல்லாஹ்வின் முகத்தை நாடியேயன்றி உங்களிடம் நாம் யாதொரு கூலியையோ, அல்லது (நீங்கள் நமக்கு) நன்றி செலுத்துவதையோ, கருதவில்லை" (என்றும்) "நிச்சயமாக நாங்கள் முகங்கடுகடுத்துச் சுண்டிவிடும் எங்கள் இறைவனிடமுள்ள ஒரு நாளைப்பற்றிப் பயப்படுகின்றோம்" (என்றும் கூறிக்கொண்டிருந்தனர்.)

அத் : 76, வசனம் 8,9,10

எனவே அல்லாஹ் தஆலா அவர்களை அந்தக் கியாமத்தின் துன்பங்களை விட்டும் காத்தருளி அவர்களுக்கு செழி செழிப்பையும் மகிழ்ச்சியையும் கொடுத்தான்.

- நூருல் அப்ஸார்

(தஃப்ஸீர் கராயிபுல்குர்ஆன், தஃப்ஸீர்ஜமல், தஃப்ஸீர்காஜின்)

அன்பர்களே! நாம் இங்குக் குறிப்பிட்டுள்ள நிகழ்ச்சி இன்றைக்குக் கிருப்பவர்களால் நம்ப முடியாததாகவும், ஏற்றுக்கொள்ள முடியாததாகவும் இருக்கலாம். எனினும் உண்மை நிலை அதுதான். வறுமையிலும் செம்மை, என்பார்களே அஃது இதுதான். கொடுத்தே பழக்கப்பட்ட கைகள்

கொடுப்பதை நிறுத்தாது. தங்களை அல்லாஹ்விற்காக ஒப்படைத்துக்கொண்டவர்களும் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை மட்டுமே எதிர்பார்த்து வாழ்பவர்களும் இப்படித்தான் இருப்பார்கள்.

பிறருக்காக எதையும் தியாகம் செய்திடும் பெருமனங்கொண்ட நல்லோர்கள் அன்றைக்கும் இருந்தார்கள்; இன்றைக்கும் இருக்கத்தான் செய்கின்றனர். அவர்கள் மக்களிடம் பெருந்திரளில் எண்ணிக்கையில் குறைந்தவர்கள்.

எனவே அண்ணலாரின் குடும்பத்தார் மூன்று நாட்களும் இருந்ததை எடுத்து ஏழைகளுக்கு வழங்கி விட்டுத் தாமும், தம் குழந்தைகளும் பட்டினிக்கிடந்தனரென்றால் அல்லாஹ் அவர்களுக்கு வறுமையிலும் பொறுமையினை கைக்கொள்ளும் வலிமையைத் தந்தான். அந்தப் பொறுமைக்குரிய சிறந்த பரிசு தான் திருக்குர்ஆன் மூலம் பாராட்டுரைகள் என்பதை மறந்திடாதீர்கள்.

அல்லாஹ்வின் அன்பைப் பெற்றிட அந்நல்லடியார்கள் எல்லா நிலையிலும் அனைத்துத் தியாகங்களையும் செய்வதற்கு ஆயத்தமாகவே இருந்து வந்தனர். அதனால்தான் உலக முடிவு நாள் வரையும் வல்லோன் அல்லாஹ் அவர்களின் திருப்பெயர்களை நிலைத்து நிற்குமாறு செய்துவிட்டான்.

"மனிதர்களுக்கு இரக்கம் காட்டாதவருக்கு அல்லாஹ்வும் இரக்கம் காட்டமாட்டான்."

- அல்ஹதீஸ்

## 23. அண்ணலார் (ஸல்) கொண்டிருந்த பேரன்பு

அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு அன்பு மகள் பாத்திமா (ரலி) அவர்களின் மீது அளவற்ற அன்பிருந்து வந்தது.

எந்நேரமும் மகளாரின் மீது மாநபி (ஸல்) அவர்களின் நினைவுகள் இருந்துகொண்டேயிருக்கும். அது போன்றே, ஹலரத் பாத்திமா (ரலி) அவர்களும் நபி (ஸல்) அவர்கள் மீதும் அன்பும் பாசமும் கொண்டிருந்தனர்.

ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் ஹலரத் அலீ (ரலி) வுடனும் ஹலரத் பாத்திமா (ரலி) உடனும் மகிழ்ச்சியாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அது சமயம் ஹலரத் அலீ (ரலி) அவர்கள் "யாரசூலல்லாஹ் எங்கள் இருவரில் தங்களுக்குமிக்க அன்பிற்குரியவர் எவர்?" என்று வினவினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "எனக்கு உங்களைவிட பாத்திமா (ரலி)வே விருப்பமானவர்: நீங்கள் பாத்திமா (ரலி)வை விட என்னிடம் கண்ணியத்திற்குரியவர் ஆவீர்கள்" என்று கூறினர்.

- மதாரிஜுந்நுபுவ்வத்

## அல்ஹதீஸ்

ஸவ்பான் (ரலி) கூறுகின்றார்கள் : நபி (ஸல்) அவர்கள் பயணம் புறப்பட்டால் எல்லாரிலும் இறுதியாக ஹலரத் பாத்திமா (ரலி) அவர்களிடம் சொல்லிக் கொண்டே போவார்கள்.

மேலும் பயணத்திலிருந்துத் திரும்பினால் முதன்மையாக ஹலரத் பாத்திமா (ரலி) அவர்களையே சந்திப்பார்கள்; பின்னரே மனைவியர் இல்லம் செல்வார்கள்.

- மதாரிஜுந்நுபுவ்வத் -மவாஹிபுலதுனிய்யா

## அல்ஹதீஸ்

ஹலரத் ஆயிஷா (ரலி) கூறுகின்றார்கள் : பாத்திமா (ரலி) அவர்களைத் தவிர வடிவத்திலும், பேச்சுவார்த்தைகளிலும், மற்ற நடையுடை பாவனைகளிலும் நபி (ஸல்) அவர்களின் விருப்பத்திற்குரியவரை (ஒப்பானவர்கள்) நான் காணவில்லை.

நபி (ஸல்) அவர்களிடம் பாத்திமா (ரலி) வருகை தந்தால், நபி (ஸல்) எழுந்திருந்து பாத்திமா (ரலி)வின் முன் சென்று அவர்களின் கையைப் பிடித்து, நெற்றியில் முத்தமிட்டு தாம் அமர்ந்திருந்த இடத்தில் அவர்களை அமர வைப்பார்ள். இவ்வாறே பாத்திமா (ரலி)விடம் நபி (ஸல்) அவர்கள் சென்றால் பாத்திமா (ரலி) தம் இருக்கையை விட்டும் எழுந்து நபி (ஸல்) அவர்களின் முன் சென்று அவர்களின் கைகளைப் பிடித்து தாங்களிலிருந்த இடத்தில் அமரவைப்பார்கள்."

- மதாரிஜுந்நுபுவ்வத்-மிஷ்காத்

### அல்ஹதீஸ்

நபி (ஸல்) அவர்கள் ஃபஜ்ரு தொழுகைக்குப் புறப்படுவார்களாயின் ஹலரத் பாத்திமா (ரலி) வின் வீட்டு வாயலில் நின்று, "ஓ அஹ்லெ பைத்துகளே! தொழுங்கள். அல்லாஹ் நாடுவதெல்லாம் உங்களை விட்டுச் சகல அசுத்தங்களையும் நீக்கி உங்களை முற்றிலும் பரிசுத்த மாக்கிவிடவே விரும்புகின்றான்" எனக் கூறுவார்கள்.

- தஃப்ஸீர் துர்ரமன்தூர்

### அல்ஹதீஸ்

திருமக்கா வெற்றிக்குப் பின்னர் ஒரு நாள் 'பாத்திமா மக்ஸூமி' என்னும் ஒரு பெண் எதையோ திருடிவிட்டுப் பிடிக்கப்பட்டு, நபி (ஸல்) அவர்களின முன்னிலையில் கொண்டு வரப்பட்டார்கள். அவர் திருடியது உண்மைதான் என்ற விசாரணையில் அறிய வந்ததும் உடனே கையை வெட்டுமாறு நபி (ஸல்) அவர்கள் ஆணையிட்டனர்.

அப்பெண்ணைச் சேர்ந்தவர்கள் இந்த ஆணையை மாற்றிட நபிகளாரிடம் பரிந்துரைச் செய்வதற்காக ஹலரத் உஸாமா (ரலி) வைத்தேர்ந்தெடுத்து அவர்களே தகுதியானவரும் துணிவுமிக்கவரும் என்று முடிவு செய்து அம்மக்கள் உஸாமா (ரலி) வை நபி (ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தனர்.

உஸாமா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து அப்பெண்ணுக்குப் பரிந்துரை பேசினார்கள். அதைக் கேட்ட நபி (ஸல்) அவர்களின் திருமுகம் சினத்தால் சிவந்துவிட்டது. உஸாமா (ரலி) வை நோக்கி "உஸாமாவே! நீர் அல்லாஹ்வின் மார்க்கத்தண்டனையிலா பரிந்துரைச் செய்கிறீர்?" எனக்கேட்க, உஸாமா (ரலி) அவர்கள் 'எனக்காக அல்லாஹ்விடம் பிழைபொறுக்கத் தேடுங்கள்!" எனக் கூறினார்கள். பின்னர் நபி (ஸல்) அவர்கள் மக்களை நோக்கி அல்லாஹ்வைப் புகழ்ந்து இவ்வாறு கூறலுற்றார்கள்.

'ஓ மக்களே! உங்களுக்கு முன்னர் வாழ்நத மக்கள் அழிந்துபட்டதற்குரிய காரணமெல்லாம் அவர்களிலுள்ள

செல்வர்கள் திருடிவிட்டால் அவன் கையை வெட்டாமல் விட்டுவிடுவர்; யாதொரு பலவீனமான (ஏழை) மனிதன் திருடிவிட்டால் அவன் கையை வெட்டி விடுவர்.

அல்லாஹ்வின் மீது ஆணையாக! என் மகள் பாத்திமா (ரலி) திருடினாலும் கட்டாயம் அவள் கையை வெட்டிவிடுவேன் என்று கூறினார்கள்.

- புகாரீ ஷரீப், ரவ்ளத்துல் அஹ்பாப்

## அல்ஹதீஸ்

ஹலரத் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்; நபி (ஸல்) அவர்கள் எனது வீட்டிற்கு வருகை தரும் முறையுடைய நாளில் தான் ஸஹாபாக்கள் நபி (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்புகள் அனுப்பியும் அந்நாளைத் தான் காணிக்கை அனுப்புவதற்குரிய நாளாகவும் கருதி வந்தனர்.

நபி (ஸல்) அவர்ளின் மனைவியர் இரண்டு குழுவினராக இருந்து வந்தனர். ஒரு குழுவில் ஆயிஷா (ரலி) ஹஃப்ஸா (ரலி) ஸஃபிய்யா (ரலி), ஸவ்தா (ரலி) ஆகியோர் மற்றொரு குழுவில் உம்மு ஸல்மா (ரலி)வும் மற்ற மனைவியரும் இருந்தனர். எனவே உம்மு ஸல்மா (ரலி)வின் குழுவிலுள்ளோர், உம்மு ஸல்மா (ரலி) அவர்களிடம் "நீங்கள் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, தாங்கள் (நபி ஸல்) எந்த வீட்டிலிருந்தாலும் சஹாபாக்கள் தங்களுக்கு அன்பளிப்புகளை அனுப்பிவிடுமாறும் ஆயிஷா (ரலி)வின் வீட்டில் இருக்கும்பொழுது மட்டுமே காணிக்கை அனுப்புவது அவசியமில்லை என்றும் சஹாபாக்களிடம் கூறிவிடுமாறு நபி (ஸல்) அவர்களிடம் சொல்லுங்கள்" என்பதாகக் கூறியனுப்பினார்கள்.

உம்மு ஸல்மா (ரலி) அவர்களும் இதுபற்றிப் பெருமானாரிடம் பரிந்து பேசினார்கள். அப்பொழுது நபி (ஸல்) அவர்களைப் பார்த்து 'யா உம்மு ஸல்மா! ஆயிஷாவின் பொருட்டு எனக்கு யாதொரு துன்பமும் கொடுக்க வேண்டாம். நான் அவரின் வீட்டிலிரும்பொழுதுதான் எனக்கு வஹீ இறங்குகிறது' என்று கூற உம்மு ஸல்மா (ரலி) அவர்கள்

அல்லாஹ்வின் தூதரே! நான் தங்களுக்குத் தொல்லைக் கொடுப்பதை விட்டும் அல்லாஹ் தஆலாவிடம் தவ்பாச் செய்கிறேன்' என்றார்கள்.

பின்னர் உம்மு ஸல்மா (ரலி) வின் குழுவைச் சேர்ந்த மற்ற மனைவியர் வர்கள் ஹலரத் பாத்திமா (ரலி) வைத்தங்கள் சார்பாக நபிகள் (ஸல்) அவர்களிடம் பரிந்துரை செய்ய அனுப்பிவைத்தனர். அவர்களும் நபி (ஸல்) அவர்களிடம் பரிந்துரை செய்தனர்.

நபி(ஸல்) அவர்கள், மகளாரை விளித்து 'அருமை மகளே! நான் யாரை விரும்புகின்றேனோ அவரை நீங்களும் விரும்புவீர்களா?' எனக் கேட்டார்கள். ஆம்; என்று மகளார் கூற அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், அவ்வாறாயின் ஆயிஷாவுடன் அன்பு கொள்ளுங்கள்' என்றனர்.

– புகாரீ ஷரீஃப்

இவ்வாறு கூறியதால் நபி (ஸல்) அவர்களுக்கு மற்ற மனைவியர் மீது அன்பில்லை எனப்பொருள் கொண்டுவிடக் கூடாது. காரணம் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கல்வி கேள்விகளில் அறிவாற்றலில் சிறந்து விளங்கினர். அரபி மொழியில் புலமைப் பெற்றிருந்ததுடன் கவிதைகள் இயற்றுவதிலும் நிகரற்று விளங்கினர். கூர்மதி படைத்த மிகச் சிறந்த பெண்மணியாகத் திகழ்ந்து வந்தனர். எனவே அண்ணலாருக்கு அன்னை ஆயிஷா (ரலி) வின் மீது தனிப்பற்றும், பாசமும் இருந்தது என்பதை உணர்வோமாக!

## கவனியுங்கள்

நபி (ஸல்) அவர்கள் தங்கள் மனைவியிருக்கு ஆற்ற வேண்டிய கடமைகளைக் குறையின்றி நிறைவேற்றி வந்தனர். வீடு தங்குவதிலும் முறையாகவே நடந்துகொண்டனர். அவர்களுக்குக் கடின நோய் ஏற்பட்ட நிலையிலும் வீடு தங்கும் முறையை மறவாமல் கவனமாகவே இருந்து வந்தனர்.

மனைவியருக்கு உணவு உடை கொடுப்பதிலிருந்து முறை வைத்துத் தங்குவது வரையும் நியாயமாகவே நடந்து வந்தனர். கணவரை மகிழ்விப்பதில் மனைவியருள் அன்னை ஆயிஷா

(ரலி) அவர்கள் சிறந்து விளங்கினார்கள். அவர்கள் கன்னிப் பெண்ணாக இருந்ததுடன் அறிவார்ந்த இனிய பேச்சினால் அண்ணலாரை மகிழ்வித்தனர். தம் கணவரின் உள்ளம் கவர்தல் மனைவிக்குரிய இலக்கணமாகும்.

### அல்ஹதீஸ்

ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களை விளித்து "பெண்களுக்குரியவற்றில் சிறந்தது எது? என்று வினவ, தோழர்கள் விடையேதும் கூறாது மவ்னமாயிருந்தனர். ஹலரத் அலீ (ரலி) அவர்கள் தம் இல்லம் வந்து பாத்திமா (ரலி)விடம் கூறினர். அப்பொழுது ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் அலீயே! பெண்களுக்குச் சிறந்தது அவள் பிற ஆடவரைக் காணாதிருப்பதும், பிற ஆடவர்கள் இவர்களைக் காணாதிருப்பதும் ஆகும் என்றனர். பின்னர் இதனை நபி (ஸல்) அவர்களிடம் கூறினார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள "இதை யாரிடம் கேட்டீர்கள்?' என்று நபி (ஸல்) அவர்கள் கேட்க 'இதனை பாத்திமா (ரலி) கூறினார்' என்றனர். உடனே நபி (ஸல்) அவர்கள் பாத்திமா (ரலி) என்னில் ஒரு பகுதியாவார் என்றனர்.

- ரவ்ளத்துல் அஹ்பாப்

### அல்ஹதீஸ்

ஹலரத் அலீ (ரலி) அவர்கள் அபூஜஹ்லின் மகளை பெண் பேசினார்கள். (அதாவது திருமணம் செய்துகொள்ள) இச்செய்தியை நபி (ஸல்) அவர்கள் அறியவும் மக்களை அழைத்து அறிவுரை கூறினார்கள்.

அந்த அறிவுரையில், நபியுடைய மகள் ஜைனப்வின் கணவர் அபுல் ஆஸைப் புகழ்ந்தார்கள். மேலும் பாத்திமா (ரலி) அவர்கள் எனது உடலிலுள்ள ஒரு துண்டாவார்கள். அவர்களுக்கு யாதொரு வருத்தம் ஏற்பட நான் பொறுக்கமாட்டேன்.

மேலும் நாயன் (அதுவல்லாஹ்) அல்லாஹ்வின் பகைவனின் மகளையும் (ரசூலுல்லாஹ்) அல்லாஹ்வின்

தூதரின் மகளையும் ஒரே மனிதரிடம் சேர்த்து வைக்கமாட்டான் என்று கூறினர்.

இதன் பின்னர் ஹலரத் அலீ (ரலி) அவர்கள் பெண் கேட்பதைவிட்டு விட்டார்கள். பின்னர் பாத்திமா (ரலி) வாழ்ந்த காலம் வரையும் வேறு திருமணம் செய்யவில்லை

## அல்ஹதீஸ்

ஸஃபீனா என்பவர் கூறுகின்றார்கள்; ஒரு நாள் ஹலரத் அலீ (ரலி) அவர்கள் வீட்டிற்கு ஒருவர் விருந்திற்கு வந்தார். ஹலரத் அலீ (ரலி) அவர்கள் அவருக்காக விருந்து தயார் செய்தனர். அப்பொழுது பாத்திமா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களையும் அழைத்தால் நன்றாக இருக்குமே என்றனர். ஹலரத் அலீ (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களை அழைத்து வந்தனர். நபி (ஸல்) அவர்கள் வீட்டு வாயற்படியின் இரண்டு நிலையின் மீது இருகைகளையும் வைத்து வீட்டிற்குள் எட்டிப்பார்க்க படங்களும் கோலங்களும் வரையப்பட்ட திரை தொங்கவிடப்பட்டிருப்பது கண்டு உடனே திரும்பி விட்டார்கள்.

பாத்திமா (ரலி) கூறுகின்றார்கள் : நான் பின் தொடர்ந்து, போய் 'யாரசூலல்லாஹ்! ஏன் திரும்பி வந்து விட்டீர்கள்?' எனக் கேட்டேன். அதற்கவர்கள் நானும் மற்ற நபிமார்களும் சித்திரங்களும் படங்களும் உள்ள வீடுகளில் நுழைவது கூடாது எனக் கூறினார்கள்.

நீங்கள் உங்கள் வீடுகளைப் படக்கடைகளாக ஆக்கி வைத்துக்கொண்டு மவ்லிதுகளும் புர்தாக்களும் பாத்திஹாகக்களும் ஓதுகின்றீர்களே! நியாயம் தானா?

அண்ணலாரை அவமதிக்கும் அவமானச் சின்னங்களாம் உருவப்படங்களையும், உங்கள் இதய தெய்வங்கள் என்று நீங்கள் எண்ணுகின்ற தலைவர்களின் உருவப்படங்களையும் மாட்டி வைத்துக் கொண்டு அண்ணலாரின் மீது புகழ்ப்பாடுகின்றீர்களே! அவை புகழ்பா அல்ல அல்ல; இகழ்பாக்கள் என்பதை நினைவில் வையுங்கள்.

தம் மகளின் வீட்டில் திரையாகத் தொங்கிய துணியில் ஓர் உருவம் இருந்ததையே விரும்பாத மாநபி (ஸல்) அவர்கள்

படக்கடையையே வீட்டில் வைத்திருப்பவர்களின் வீடுகளுக்காக வருகை தருவார்கள்?

அறிவுடையோர் மேற்காணும் ஹதீஸை சிந்திக்கட்டும்! தெளிவு பெறட்டும்!

## 24. அன்னை பாத்திமா (ரலி)வும் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களும்

ஹலரத் ஆயிஷா (ரலி) அவர்கள் ஹலரத் பாத்திமா (ரலி)யை விடப் பத்து வயது இளையவராக இருந்தார்கள். (எனினும்) இருவரும் மிகவும் அன்புடன் இருந்து வந்தனர்.

அல்ஹதீஸ்

ஆயிஷா (ரலி) கூறுகின்றார்கள்: நபி (ஸல்) அவர்களுக்குப்பின் சிறந்தவர் பாத்திமா (ரலி) அவர்களைவிட வேறு எவருமில்லை

– ஜுர்கானி

### அல்ஹதீஸ்

மக்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடம் நபி (ஸல்) அவர்களுக்கு 'மிக்க அன்பிற்குரியவர் எவர்?' என்று வினவ, பாத்திமா தான் என்றனர். ஆண்களில் மிக்க அன்பிற்குரியவர் எவர் என்று வினவ பாத்திமா (ரலி)வின் கணவர் அலீ (ரலி) தான்' என்றனர். இன்னும் ஓர் அறிவிப்பில் மக்கள் பாத்திமா (ரலி) விடம் நபி (ஸல்) அவர்களுக்கு மிக்க விருப்பமானவர் யார்?' என்று வினவியபொழுது ஆயிஷா (ரலி) அவர்கள் தாம்; என்றும் ஆண்களில் எவர் எனக்கேட்க ஆயிஷா (ரலி)வின் தந்தை அபூபக்கர் (ரலி) அவர்களே! எனக் கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

– மதாரிஜுந்நுபுவ்வத்

மேலும் சில பொழுது பாத்திமா (ரலி) அவர்களுக்கும், வாய்ச்சண்டை ஏற்படுவதும் உண்டு. ஒரு நாள் ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் ஆயிஷா (ரலி)யைப் பார்த்து நான் நபிகளாரின் மகளாக இருப்பதால் நான் உங்களைவிட

மேலானவளாயிருக்கும் என்றனர்.

ஹலரத் ஆயிஷா (ரலி) அவர்கள் 'உலக விஷயத்தில் நீங்கள் மேலானவர்தான். பெருமைக்குரியது மறுமைக்குரிய பெருமைதான். அதாவது நீங்கள் சுவர்க்கத்தில் அலீ (ரலி) வுடனிருப்பீர்கள்; நான் நபி (ஸல்) அவர்களுடனிருப்பேன். எனவே எவர் மேலானவர் என்று நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள் என்று கூறினார்கள்.

இதைக் கேட்ட ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் அழத் தொடங்கினார்கள். ஹலரத் ஆயிஷா (ரலி) எழுந்து அவர்களின் தலையை முத்தமிட்டு 'நான் என்ன கேவலமானவள் உங்களுடைய பதவி பெரியதாகும். உங்களின் தலை முடியில் நானும் ஒன்றாக இருந்தால் அதுவே எனக்குப் பெரும்பேறாக இருக்கும்' என்று சொன்னார்கள்.

- ரவ்ளத்துல் அஹ்பாப்

### அல்ஹதீஸ்

ஆயிஷா (ரலி) கூறுகின்றார்கள் ; நான் பாத்திமா (ரலி)யை விட வேறு எவரையும் உண்மையாளராகக் காணவில்லை. ஒரு முறை (எனக்கும் பாத்திமா (ரலி) ஆயிஷா (ரலி)வுக்கும்) பாத்திமா(ரலி)வுக்கும் இடையே ஏதோ மனக்கசப்பு ஏற்பட்டுவிட்டது. அப்பொழுது ஹலரத் ஆயிஷா (ரலி) நபிகளாரிடம் நடந்தவற்றைக் கூறினார்கள். பாத்திமா (ரலி) அவர்களிடமே கேளுங்கள் பொய் சொல்லமாட்டார்கள் என்று கூறினார்கள்.

- அக்மால் ஃபீ அஸ்மாயிர் ரிஜால்

## 25. ஹலரத் ஜஃபரின் ஷஹாதத்தும் பாத்திமா (ரலி) அவர்களும்

ஹலரத் ஜஃபர் (ரலி)வின் மனைவி அஸ்மாபின் உமைஸ் கூறுகின்றார்கள்; மூத்தா போரில் ஹலரத் அலீ அவர்களின் சகோதரர் ஹலரத் ஜஃபர் (ரலி) அவர்கள் ஷஹீதான செய்தியை நபி (ஸல்) அவர்கள் அறிந்து என் இல்லம் வந்து ஜஃபரின்

குழந்தைகள் எங்கே எனக் கேட்டனர். நான் அப்பொழுது பிள்ளைகளை நபி (ஸல்) அவர்களிடம் அழைத்துப்போனேன். நபி (ஸல்) அவர்கள் அப்பிள்ளைகளை முத்தமிட்டு மடியில் வைத்துக் கொண்டனர். மேலும் நபி (ஸல்) அவர்களின் கண்களில் கண்ணீர் ஓடியது. அப்பொழுது அவர்களிடம் 'ஜஃபர் (ரலி) அவர்களைப் பற்றி ஏதும் கேள்விப்பட்டீர்களா?' எனக்கேட்டேன். அப்பொழுது அவர்கள் 'ஜஃபர் ஷஹீதாகி விட்டார் என்றார்கள். இதனைச் செவியுற்ற நான் என்னை மறந்து கூச்சலிட்டேன். பெண்களெல்லாம் கூடிவிட்டனர்.

நபி (ஸல்) அவர்கள் 'கூச்சலிடாதீர்கள்' என்று கூறி விட்டு அங்கிருந்து பாத்திமா (ரலி)வின் இல்லம் சென்று விட்டனர். அங்கு ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் 'ஓ என்னுடைய சிறிய தந்தையே' எனக் கூறி அழுதவர்களாக இருந்திட ஜஃபர் (ரலி)விற்காக அழவேண்டியதுதான் எனக் கூறிவிட்டு 'ஜஃபரின் வீட்டார் கவலையில் உணவு சமைக்க மாட்டார்கள். எனவே அவர்களுக்காக நீங்கள் உணவு தயார் செய்யுங்கள்' எனக் கூறினார்கள்.

ஜஃபர் (ரலி) ஷஹீதான பிறகு அஸ்மா (ரலி)வை அபூபக்ர் சித்தீக் (ரலி) அவர்கள் மணம் செய்து கொண்டனர். ஹலரத் அபூபக்ர் (ரலி) காலமான பின் ஹலரத் அலீ (ரலி) அவர்கள திருமணம் செய்து கொண்டனர்.

இதே ஹிஜ்ரீ எட்டாம் ஆண்டு மாரியாகிப்திய்யா (ரலி) வின் மூலம் நபி (ஸல்) அவர்கட்கு ஓர் ஆண் குழந்தைப் பிறந்தது. அக்குழந்தைக்கு இப்றாஹீம் என்று பெயர் வைத்தார்கள். இன்னும் இதே ஆண்டில் பாத்திமா (ரலி)வின் சகோதரி ஜைனப் (ரலி) காலமானார்கள்.

- ரவ்ளத்துல் அஹ்பாப்

## மஸ்அலா

மேற் கூறப்பெற்ற நிகழ்ச்சியில் நபி (ஸல்) அவர்கள் "ஜஃபரின் வீட்டார் கவலையில் உணவு சமைக்க மாட்டார்கள் எனவே நீங்கள் அவர்களுக்காக உணவு தயார் செய்யுங்கள்" எனக் கூறியுள்ளனர். ஆம்; மய்யித்து வீடுகளில் விருந்து

வைப்பது பித்அத்தாகும். மையித்தை வைத்துக் கொண்டே அவ்வீட்டில் உணவு சமைப்பது விரும்பத்தகாத செயலாகும். மய்யித்தை அடக்கம் செய்துவிட்டு அனைவரும் வந்ததும், வீட்டுக்காரர் எல்லாரும் வாருங்கள்; சாப்பிட்டு விட்டுச் செல்லுங்கள் எனக் கூறுவார்.

மய்யித்து வீட்டார் கவலையில் இருப்பார்கள். அவர்களுக்கு எவ்வகையிலும் பிறர் தொல்லைக் கொடுப்பதைத் தவிர்த்துக் கொள்ளவேண்டும். மய்யித்தின் உறவினர்கள் தாம், துக்கத்தில் இருக்கும் மய்யித்து வீட்டாருக்கு உணவு சமைத்துக் கொடுக்க வேண்டும். மய்யித்து வீட்டாரை 'தஃஜியத், அதாவது துக்கம் விசாரித்தல் மூன்று நாட்களேயாகும். அதற்கு மேல் கூடாது. மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் மேற்கொள்வது முறையல்ல.

சிலர் நாற்பது நாட்கள் வரை தாடி வளர்த்துக்கொண்டு திரிவார்கள். இவையெல்லாம் இந்துக்கள் வழக்கம். வெளியூர் சென்றிருந்த ஒருவர் துக்கம் விசாரிக்க மய்யித்து வீட்டாரைச் சந்தித்து ஆறுதல் சொல்லலாம். குறிப்பிட்ட அந்த மூன்று நாட்களுக்கு மேல் ஆயிருப்பினும் சரியே! இத்தாவில் இருக்கும் பெண்ணிடம் அடிக்கடிச் சென்று வருவது பெண்களின் வழக்கம். இது தவிர்க்கப்பட வேண்டிய ஒன்றாகும். காரணம் அப்பெண்ணிடம் பழைய நினைவுகள் ஏற்படுத்தி மேலும் கவலையை உண்டாக்கக் கூடாது என்பதால் ஆகும். மய்யித்து வீட்டில் மூன்று நாட்கள் வரை மற்றவர்கள் உணவு உண்பது மக்ரூஹ் ஆகும்.

## 26. உம்முகுல்தூம் (ரலி) வின் மரணம்

ஹஜ்ரீ ஒன்பதாம் ஆண்டு நபி (ஸல்) அவர்களின் திருமகளாரும், ஹலரத் உஸ்மான் (ரலி)வின் துணைவியாருமாண உய்முகுல்தூம் (ரலி) அவர்கள் மரணமானார்கள். நபி (ஸல்) அவர்கள் உம்முகுல்தூம் (ரலி) வின் கப்ருக்குச் சென்று கண்ணீர் சிந்தினர்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "எனக்குப் பத்துப் பெண் மக்கள் இருந்தாலும் ஒன்றுக்குப்பின் ஒன்றாக

உஸ்மானுக்குத் திருமணம் செய்து வைப்பேன்."

ஹிஜ்ரீ பத்தாம் ஆண்டு நபி (ஸல்) அவர்களின் குழந்தை இப்றாஹீம் இறந்தார்கள். இதன் காரணமாக நபி (ஸல்) அவர்கள் மிகவும் துயர்கொண்டனர். ஹலரத் இப்றாஹீம் (ரலி) சக்ராத்தில் இருந்தபோது அவர்களை நபி (ஸல்) தங்கள் மடியில் வைத்திருந்தனர்.

இந்நிலைக் கண்டு இருகண்களிலிருந்தும் கண்ணீர் ஓடியது. இதை அப்துற்றஹ்மானிப்னு அவ்ஃப் (ரலி) கண்டதும் 'அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் மய்யித்துக்காக அழக் கூடாது என்றீர்களே தற்சமயம் தாங்களே அழுகின்றீர்களே! என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் 'ஓ அப்துற்றஹ்மானே! மய்யித்தின் மீதுள்ள அன்பினால் கண்ணீர் ஓடுகிறது. அது மய்யித்தைப் பார்த்ததும் தானாகவே வந்துவிடும்" என்றார்கள்.

இன்னுமொரு அறிவிப்பில் "இரண்டு வகைச் சத்தத்தை விலக்கினேன். ஒன்று, வீண் விளையாட்டு, இராகம் பாடுவது, இரண்டாவது துன்பம் வந்துள்ளபோது துணியைக் கிழித்துக்கொண்டும் முகத்தைப் பிராண்டிக் கொண்டும் ஒப்பாரி வைத்து அழுவது என்றார்கள்.

மேலும் உஸாமா (ரலி) அவர்கள் அழ ஆரம்பித்த பொழுது நபி (ஸல்) அவரக்ள் தடுத்து "அல்புகாஉ மினர் ரஹ்மத்தி-வஸ்ஸீராக்கு மினஷ்ஷைத்தானி.

அழுவது அன்பில் உள்ளதாகும். (அதாவது இரக்கத்தின் பாற்பட்டது.) ஒப்பாரி வைத்து கூச்சலிடுவது ஷைத்தானில் உள்ளதாகும் என்றார்கள். - ரவ்ளத்துல் அஹ்பாப்

## தர்க்கம்

ஹிஜ்ரீ பத்தாம் ஆண்டு நபி (ஸல்) அவர்கள் பஹ்ரான் நாட்டு கிருத்துவர்களுக்குக் கடிதம் எழுதி அவர்களை இஸ்லாத்தில் சேருமாறு அழைத்தனர். அவர்கள் தங்களில் உள்ள பதினான்கு பேர்களை மதீனாவிற்கு அனுப்பி உண்மை நிலை யாதன அறிந்து வருமாறு அனுப்பினார்கள். வந்தவர்களை நபி (ஸல்) அவர்கள் இஸ்லாத்தில் சேருமாறு

அழைத்தனர். அதனை மறுத்துவிட்டு ஈஸா (அலை) அவர்களைப் பற்றிச் சில கேள்விகள் கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் தான் பதில் கூறுவதாக வாக்குறுதியளித்தார்கள். மறுநாள் இத்திருவசனம் இறங்கிற்று.

"நிச்சயமாக அல்லாஹ்விடம் ஈஸாவுக்கு உதாரணம் ஆதமுடைய உதாரணத்தைப் போன்றதே! அவன் அவரை மண்ணால் உற்பத்தி செய்து (மனிதனாக) ஆகுக" என்று கூறினான். உடனே (அவ்வாறு) ஆகிவிட்டது. (நபியே!) ஈஸாவைப் பற்றி உம் இறைவனிடமிருந்து கிடைத்த உண்மை(யான செய்தி இது தான். ஆகவே (இதைப்ப பற்றிச்) சந்தேகப்படுவோரில் நீரும் (ஒருவராக) ஆகிவிட வேண்டாம். (நபியே) உமக்கு உண்மையான செய்தி கிடைத்த பின்னரும், இதைப்பற்றி உம்மிடம் எவரும் தர்க்கித்தால் (அவர்களுக்கு) நீர் கூறும் "வாருங்கள்; நாம் எங்களுடைய மக்களையும் உங்களுடைய மக்களையும், எங்களுடைய மனைவிகளையும், உங்களுடைய மனைவிகளையும எங்களையும் உங்களையும் அழைத்து (ஒன்று சேர்த்து) வைத்துக் கொண்டு (ஒவ்வொருவரும் தத்தம் கூற்றே உண்மையெனச் சத்தியம் செய்து (இதற்கு மாறாகக் கூறும்) பொய்யர்களின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக என்று பிரார்த்திப்போம்"

அத்தியாயம் 3, வசனங்கள் : 60-61

இத்திருவசனத்தை நபிகள் (ஸல்) அவர்கள் அந்த கிருத்துவர்களுக்கு ஓதிக்காண்பித்தார்கள். பின்னும் அவர்கள் ஏற்க மறுத்துவிட்டதால் அவர்களை நபி (ஸல்) அவர்கள் தர்க்கத்திற்கு அழைத்தார்கள். அதற்கவர்கள் "நாங்கள் சிந்தித்துச் சொல்கிறோம்" எனக் கூறினர். மறுநாள் நபி (ஸல்) அவர்கள் ஹுஸைனை தூக்கிக்கொண்டு, ஹஸனின் கையைப் பிடித்தவர்களாக வீட்டிலிருந்து வெளிப்பட்டு பாத்திமா (ரலி)வும் அலீ (ரலி) அவர்களும் நடந்துவர நான் துஆச் செய்கிறேன் நீங்கள் ஆமீன் சொல்லுங்கள் என்றார்கள். கிருத்துவர்கள் இதைக்கண்டு அவர்களில் ஒருவன் ''இவர்களைக் கண்டால் அல்லாஹ்வின் உதவியால் இந்த

மலையை அந்தப்பக்கம் நகர்த்திட எண்ணினாலும் நகர்த்திவிடுவார்கள். இவர்களுடன் தர்க்கம் செய்ய வேண்டாம்; அவ்வாறு செய்வீர்களாயின் அழிந்துபோய் விடுவீர்கள். மேலும் உலகில் ஒரு சிருத்துவனும் இருக்கமாட்டான் என்று சொன்னான். இறுதியாகத் தர்க்கம் நடைபெறவில்லை. பின்னர் சமாதானமாகிப் போனார்கள்.

## 27. இறுதி ஹஜ்ஜில் அன்னை பாத்திமா (ரலி)

இந்த ஹிஜ்ரீ பத்தாம் ஆண்டு நபி (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்குச் செல்ல வேண்டும் என்னும் பேரவாகொண்டு, என்னுடன் வர விரும்புகின்றவர்கள் வரலாமென்று அரபுகளுக்கு அறிக்கை விடுத்தார்கள். எனவே அந்த இறுதி ஹஜ்ஜில் நபி (ஸல்) அவர்களுடன் ஓர் இலட்சத்து இருபத்து நான்காயிரம் பேர்கள் ஒன்று திரண்டனர். மேலும் நபி (ஸல்) அவர்களின் துணைவியரும், ஹலரத் பாத்திமா (ரலி) வும் ஆயத்தமாயினர். ஹஜ்ஜுடைய நாளில் குத்பா பேருரையில் நபி (ஸல்) இவ்வாறு கூறினார்கள் :

"ஓ மக்களே! என் மூலம் ஹஜ்ஜின் சட்டங்களைக் கேட்டு அறிந்து கொள்ளுங்கள். நான் இதற்குப்பின் ஹஜ்ஜுச் செய்யமாட்டேன்" என்றனர். அவர்கள் கூறியவாறே நபி (ஸல்) மறுஆண்டு காலமானார்கள். உண்மையில் இதுவே இறுதி ஹஜ்ஜாகயிருந்தது. அதனால் தான் இதற்கு 'ஹஜ்ஜத்துல் வதாயி' எனப்பெயர் வழங்கப்பெற்றது. அதாவது இறுதிப் பயண ஹஜ், இறுதி ஹஜ்.

மேலும் நபி (ஸல்) அவர்கள் நீங்கள் உங்களுக்குள் ஒருவருக்கொருவர் இரத்தம் சிந்துவதும் பிறரின் கண்ணியத்திற்கு இழுக்கு ஏற்படுத்துவதும் ஹராமாயிருக்கும். மேலும் ஒவ்வொருவரும் தம் பெண்கள் பொருட்டு அல்லாஹ்வை அஞ்சிக் கொள்வாராக! பெண்களைத் துன்புறுத்தாதீர்கள். அவர்களுக்கு அநியாயம் செய்யாதீர்கள். இன்னும் உங்கள் மீது பெண்களாகிய அவர்களுக்குச் செலவினங்களுக்குக் கொடுப்பதும், ஆடை

முதலியவைக்கொடுப்பதும் கட்டாயமாகும். நான் குர்ஆனை விட்டுச் செல்லுகின்றேன். நீங்கள் அதன்படி செயலாற்றுங்கள்' என்றார்கள்.

## 28. இறுதி நபியின் இறுதி முடிவு

நபி (ஸல்) அவர்களுக்கு நோய் கடினமானபொழுது அவர்களுக்கு இறப்பு நெருங்கி விட்டது என்பதை உணர முடிந்தது. ஸஃபர் மாதம் புதன்கிழமையன்று அவர்களுக்கு நோய் ஆரம்பமானது. அதுபொழுது மைமூனா (ரலி) வின் இல்லத்தில் இருந்தார்கள். பின்னர் ஆயிஷா (ரலி)வின் இல்லம் வந்தனர். மீண்டும் மைமூனா (ரலி)வின் இல்லம் சென்றனர். அங்கு நோய் மிகுதியாகி விட்டது. 'அஜ்வாஜெ முதஹ்ஹறாத்' என்னும் தூய மனைவியர் அங்குக் குழுமினர். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் 'நான் நாளை எங்கிருக்க வேண்டும்?' என்று கேட்டார்கள்.

அதன் உட்பொருள் ஆயிஷா (ரலி) வின் வீட்டிலிருந்தால் நலமாக இருக்கும் என்பதாகும். அப்பொழுது பாத்திமா (ரலி) அவர்கள் அண்ணலாரின் மனைவியரை நோக்கி, 'நபி (ஸல்) நோயுற்றிருக்கும் இந்நிலையிலும் ஒவ்வொருவர் வீட்டிற்கும் முறைப்படி வருவதென்பது கடினமானதாகும். எனவே ஆயிஷா (ரலி) வின் இல்லத்திலேயே தங்குவது நலமாக இருக்கும்' என்றார்கள். எல்லா மனைவியரும் ஏற்றுக் கொண்டனர். பின்னர் நபிகளார் (ஸல்) அவர்களை ஆயிஷா அவர்களின் இல்லத்திற்குக் கொண்டு வரப்பட்டது. ஆனாலும் நோய் மிகுதியாகிக் கொண்டே வந்தது. காய்ச்சலின் கொடூரத்தில் கையை உடலில் வைக்கமுடியாத அளவிற்கு காய்ச்சல் ஏற்பட்டுவிட்டது.

நபி (ஸல்) அவர்கள் பதினேழு நாட்கள் நோயில் இருந்தனர். மகளார் பாத்திமா (ரலி) வை கூப்பிட்டனுப்பினார்கள். அவர்கள் வந்தவுடன் என் மகளுக்கு நலவுண்டாகட்டும் எனக் கூறி வலப்பக்கம் அவர்களை அமர வைத்து இரகசியமாக ஏதோ காதில் சொன்னார்கள். அதைச் செவியுற்றதும் ஹலரத்

பாத்திமா (ரலி) அவர்ள் அதிகமாக அழுதார்கள். மீண்டும் எதையோ கூறினார்கள். அதைச் செவியுற்றதும் புன்னகைப் பூத்தார்கள்.

அன்னை ஆயிஷா (ரலி) கூறுகின்றார்கள்: நான் பாத்திமா (ரலி) அவர்களிடம் 'அழுததற்கும், சிரித்ததற்கும் என்னகாரணம்?' எனக் கேட்டேன். 'நான் நபி (ஸல்) கூறிய இரகசியத்தை வெளியிட மாட்டேன்' எனக் கூறிவிட்டார்கள்.

நபி (ஸல்) அவர்களின் மறைவிற்குப் பின் கேட்டேன். அதற்கு பாத்திமா (ரலி) கூறினார்கள் : முதலாவது ஏன் காதில் நபி (ஸல்) அவர்கள் கூறியதாவது : "ஆண்டு தோறும் ஜிப்ரயீல் (அலை) என்னிடம் வந்து குர்ஆனை ஓதிக் காண்பித்தார்கள்; இவ்வாண்டு இருமுறை ஓதிக் காண்பித்தார்கள். அதனால் எனக்கு இறப்பு அண்மிவிட்டது என்பதை அறிந்து கொண்டேன்" என்றனர். இதைக் செவியுற்றதும் அழுதேன். இரண்டாவது முறை என் காதில் யா பாத்திமா! என்னை நீர்தான் முதலில் சந்திப்பீர்! என்றனர். அதாவது நீர் அஹ்லுல்பைத்கள் அனைவருக்கு முன்பதாக இறப்பீர்' என்றனர். அது கேட்டுச் சிரித்தேன்.

நபி (ஸல்) அவர்களின் இறுதி நேரத்தில் ஓர் அரபி வாசலில் வந்து ஸலாம் சொல்லி வீட்டிற்குள் வருவதற்கு அனுமதி கேட்டு நின்றனர். அப்பொழுது பாத்திமா (ரலி) அவர்கள் தலைமாட்டில் இருந்தவாறு இப்பொழுது சந்திக்க இயலாது என்றனார். இரண்டாம் முறையும் அந்த அரபி அனுமதி வேண்டினார். அப்பொழுதும் பாத்திமா (ரலி) அவர்கள் முன்போலவே பதில் கூறினார்கள். மூன்றாவது முறையும் அவர் சத்தமிட்டு அனுமதி வேண்டினார். அவர் குரல் ஒலி கேட்டு வீட்டிலிருந்தவர்கள் அஞ்சிவிட்டனர். அது சமயம் நபி (ஸல்) உணர்வு பெற்று என்னவென்று வினவினர். ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் அரபி வீட்டிற்குள் வர அனுமதி வேண்டியதையும் அதற்குத் தாம் அளித்த மறுப்பையும் தெரிவித்தார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் யா பாத்திமா நீர் யாருடன் பேசிக் கொண்டிருந்தீர்கள் தெரியுமா? எனக் கேட்டார்கள. 'தெரியாது'

எனக் கூறினார்கள். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் அனுமதி கேட்பவர் மலக்குல் மவ்த் ஆவார்கள் என்று கூறினர். அதைக்கேட்டு ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் மதீனா பாழாகிவிட்டது என்றனர். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் பாத்திமா (ரலி) வின் கையைப் பிடித்து தங்கள் நெஞ்சில் வைத்துக் கண்ணை மூடினார்கள். மக்களெல்லாம் ஆவிபிரிந்து விட்டதென்றே எண்ணினர். ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் 'ஓ என் தந்தையே!' என்றனர். பதிலில்லை.

பின்னர் பாத்திமா (ரலி) அவர்கள் 'என் உயிர் தங்களுக்குத் தத்தமாகட்டும் சிறிது கண் திறந்து பாருங்கள்; ஒரு சொல் பேசுங்கள்!' என்றார்கள். பின்னர் நபிகளார் தம் விழி திறந்து 'மகளே அழாதிருப்பீராக' உம் அழுகையினால் அர்ஷை சுமக்கும் வானவர்களும் அழுகிறார்கள் என்று கூறினர். மேலும் யாஅல்லாஹ்! என்னைப் பிரிவதில் பாத்திமாவுக்குப் பொறுமையைக் கொடு! என்று துஆ இறைஞ்சினார்கள். பாத்திமா என் உயிர் பிரிந்து விடுமாயின் 'இன்னாலில்லாஹி வ இன்னா இலாஹி ராஜிஊன்' என்று கூறுக! இது சோதனைகளுக்குப் பகரமாகயிருக்கும். இதைக் கேட்டக ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் 'தங்களுக்குப் பகரமாக எப்பொருள் உள்ளது?' எனக் கேட்டார்கள். பின்னர் நபி (ஸல்) அவர்கள் கண்களை மூடினார்கள். இன்றைக்குப்பின் அதாவது சகராத்திற்குப் பின் என் மீது யாதொரு துன்பமுமில்லை எனக் கூறி கண்களைத் திறந்து ஆயிஷா (ரலி)வை அழைத்து ஏதோ வஸியத்துச் செய்தார்கள்.

மேலும் ஹஃப்ஸா (ரலி) மற்றுமுள்ள மனைவியரை அழைத்து நீங்கள் வீட்டிலேயே இருங்கள்; பிறரின் கண்களை விட்டும் மறைந்திருங்கள் என்றும் கூறி மேலும் சில அறிவுரைகளைப் பகர்ந்தனர். பாத்திமா (ரலி) அவர்களை விளித்து ஹஸனையும் ஹுஸைனையும் அழைத்து வாருங்கள் என்றனர். அவர்கள் அண்ணலாரிடம் வந்ததும் அழத்தொடங்கினர். அவர்கள் அழுத்தைப் பார்த்து வீட்டிலிருந்தவர்களும் அழுதுவிட்டனர். ஹஸன் (ரலி) அவர்கள்

தம் முகத்தை நபி (ஸல்) அவர்களின் முகத்தில் வைத்தனர். ஹுஸைன் (ரலி) தங்கள் தலையை நபிகளாரின் நெஞ்சில் வைத்தார்கள். நபி (ஸல்) தங்கள் கண்களைத் திறந்து கருணையுடன் நோக்கி முத்தமிட்டு அவ்விருவரின் கண்ணியம் மரியாதைகள் குறித்து மக்களுக்கு எடுத்துரைத்தார்கள்.

பின்னர் அலீ (ரலி) வை அழைத்தனர். அவர்களும் அங்கு வந்து நபி (ஸல்) அவர்களின் மீது தம் கையை வைத்தனர். நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களுக்கும் சிலவற்றைக் கூறினார்கள். நபிகளார் அலீ (ரலி) வுடன் பேசிக்கொண்டிருக்கும் பொழுதே அண்ணலாரின் நிலை மாறிவிட்டது. பெண்களெல்லாம் திரைக்குக் பின்னால் மனங்கலங்கியவர்களாக இருந்தனர். இதனை அறிந்த ஹஸரத் அப்பாஸ் (ரலி) அவர்களும் அலீ (ரலி) அவர்களும் நபி (ஸல்) அவர்களைப் படுக்க வைத்துவிட்டு வெளியே வந்துவிட்டனர்.

பின்னர் நபி (ஸல்) அவர்கள் மலக்குல் மவ்த் (அலை) அவர்களுக்கு அனுமதி கொடுத்ததும் அவர்கள் அண்ணலாரின் உயிரைக் கைப்பற்றினார்கள். சகராத்தின் வேதனையால் நபி (ஸல்) அவர்களின் திருமுகம் சிவந்தும், சஞ்சல முற்றும் மாறுதலுற்றும் கொண்டிருந்தது. அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் தண்ணீரால் முகத்தைத் துடைத்து "நாயனே சகராத்தில் எனக்கு உதவி செய்!" என்று துஆ இறைஞ்சினார்கள்.

ஆயிஷா (ரலி) கூறுகின்றார்கள் : "நபி (ஸல்) அவர்களின் இறுதிவேளையில் அவர்களின் முபாரக்கான தலை என் மடிமீது இருந்தது. அப்துற்றஹ்மானிப்னு அபூபக்ர் (ரலி) வின் கையில் மிஸ்வாக் என்னும் பல் துலக்கும் குச்சியருந்தது. நபிகளார் மிஸ்வாக் செய்யவிரும்பினார்கள். நான் அதை வாங்கி என் வாயில் வைத்துமென்று மென்மையாக்கித் தந்தேன். நபி (ஸல்) அவர்கள் அதனை என்னிடமிருந்து வாங்கி விரைவாக பல்துலக்கினார்கள். உயிர் கைப்பற்றப்டும் நேரத்தில் 'உயர்வு மிக்கத் தோழனுடன் சேர்த்துவிடு' என்னும் துஆவைக் கேட்டார்கள். அதாவது உயர்வு மிக்க எனது தோழனாகிய

இறைவா என்னை உன்னுடன் அழைத்துக்கொள்; எனக்கேட்டுக் கொண்டேயிருந்தனர். ரபீஉல் அவ்வல் பன்னிரெண்டாம் நாள் திங்கட்கிழமைஅன்று தங்களது அறுபத்து மூன்றாம் அகவையில் காலமானார்கள். (இன்னாலில்லாஹி-வஇன்னா இலைஹி ராஜிஊன்)

நபி (ஸல்) அவர்களின் இறுதி சொற்கள், "தொழுகையைப் பற்றிப் பிடித்துக்கொள்ளுங்கள்! அடிமைகள் விஷயத்தில் அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள்" என்பதேயாகும்.

நபி (ஸல்) அவர்கள் இறந்தபோது ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் தாங்கள் அல்லாஹ்விடம் சென்று விட்டீர்கள்; ஜன்னத்துல் ஃபிர்தவ்ஸ். உங்களின் வீடாகும். ஜிப்ரயீல் (அலை) அவர்களுக்கு மரணச் செய்தியை அறிவிக்கலாமா?" தந்தையே! தங்களுக்குப்பின் எவருக்கு 'வஹீ' வரப்போகிறது? எப்பொழுது எங்களிடம் ஜிப்ரயீல் (அலை) வரப்போகிறார்கள்?' நாயனே, இந்தப் பாத்திமாவின் உயிரை ரசூலுல்லாஹ்வின் உயிருடன் சேர்த்துவிடு! இறைவா! ரசூல் (ஸல்) அவர்களின் சந்திப்பை எனக்கு சமீபமாக்கிவை ! நாயனே! உனது ஹபீபின் நன்மையை விட்டு என்னை வாய்ப்புக்கெட்டவளாக ஆக்கிவிடாதே! நாயனே! மறுமை நாளில் அவர்களின் பரிந்துரையை விட்டும் தடுக்கப்பட்டவளாக என்னை ஆக்கிவிடாதே! என இறைஞ்சி அழுதார்கள். ஆயிஷா (ரலி)வும் அழுதார்கள். மேலும் நபி (ஸல்) அவர்கள் இறந்த பின்னர் பாத்திமா (ரலி) அவர்கள் சிரித்து எவரும் காணவில்லை. அண்ணலாரின் ஆவி பிரிந்த செய்தி சஹாபாக்கள் அறிய வந்ததும் தன்னிலை குலைந்தவர்களாய் பித்துப்பிடித்தவர்களாய் ஆகிவிட்டனர்.

ஹலரத் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் இச்செய்தியைக் கேட்டதும் நாயகமே! எனக் கூறியவர்களாக விரைந்து வீடு வந்தனர். நபி (ஸல்) அவர்களின் நெற்றியில் முத்தமிட்டார்கள்.

சஹாபாக்களின் ஒருமித்தக் கருத்தின்படி ஹலரத் அபூபக்ர் 'கலீபாவாக' நியமிக்கப்பட்டார்கள். ஹலரத் அப்பாஸ் (ரலி) ஹலரத் அலீ (ரலி) மற்றும் 'அஹ்லெ பைத்' கள் அனைவரும்

சேர்ந்து அண்ணலாரைக் குளிப்பாட்டினர். அதன் பின்னர் ஹலரத் ஆயிஷா (ரலி)வின் வீட்டில் உயிர் கைப்பற்றப்பட்ட இடத்தில் அடக்கம் செய்யப்பட்ட பின்னர் தோழர்கள் முதன்மையாக பாத்திமா (ரலி)வின் இல்லம் வந்து அவர்களுக்கு ஆறுதல் கூறினர். அப்பொழுது ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் சஹாபாக்களை விளித்து "நபி(ஸல்) அவர்களை அடக்கம் செய்துவிட்டீர்களா? என்று வினவ, தோழர்கள் ஆம் என்றனர். மீண்டும் சஹாபாக்களை விளித்து, என்ன! நபி (ஸல்) அவர்கள் 'நபிய்யுர் ரஹ்மா' 'அருள் நபி அல்லவா?' எவ்வாறு நீங்கள் அடக்கம் செய்தீர்கள்? எப்படி உங்களுக்கு மனம் வந்தது? அவர்கள் மீது மண்ணைத் தள்ளினீர்களா?' எனக் கேட்க சஹாபாக்கள் 'ஆம்; என்றனர். எங்களுக்கு அதில் கவலை தான் இருந்தது. எனினும் என் செய்வது? அல்லாஹ்வின் கட்டளையை மீறிட எவ்வழியுமில்லை" என்றனர்.

அதன் பின்னர் ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் கப்று ஷரீஃபில் வந்து மண்ணறையின் மண்ணை எடுத்து கண்களில் ஒற்றிக் கொண்டு பின்வரும் கருத்துள்ள கவிதைகளை கூறியழுதார்கள்.

எந்த மனிதன் நபிகளாரின் மண்ணறையின் மண்ணை முகர்ந்தானோ அவனுக்கு வேறு மணப்பொருளை முகர்ந்திட என்ன அவசியம்?

என் மீது சில முஸீபத்துகளைப் போடப்பட்டுள்ளது.

அந்த முஸீபத்துக்களை ஒளிமிகு பகலின் மீது போடப்படினும் அஃது இருளடைந்த இருளாகவே ஆகிவிடும்.

மேலும் பாத்திமா (ரலி) பாடுகின்றார்கள்.

எனது இவ்வுயிர் இந்த மூச்சுடன் கட்டப்பட்டுள்ளது. அந்தோ! கைசேதமே! இந்த மூச்சோடு உயிர் போய்விடக் கூடாதா?

யா நபிய்யல்லாஹ்! உங்களுக்குப் பின் நான் உயிர் வாழ்வதில் எந்த நன்மையுமில்லை.

நான் அழுவதெல்லாம் எங்கே எனது வாழ்நாட்கள் நீண்டு விடுமோ என்னும் அச்சத்தினால் தான்.

இவ்வாறே ஹலரத் அபூபக்கர் உமர் (ரலி) ஹஸ்ஸானிப்னு

தாபித் (ரலி) ஹலரத் ஆயிஷா (ரலி) மற்றும் பலர் மனவேதனைகளுடன் கவிதைகளைப் பாடினர்.

- ரவ்ளத்துல் அஹ்பாப் - மதாரிஜுந்நுபுவ்வத்

## 29. ஹலரத் பாத்திமா (ரலி) வின் மரணம்

நபி (ஸல்) அவர்கள் உயிர் வாழ்ந்த காலத்திலேயே அவர்களின் எல்லா மக்களும் இறந்துவிட்டனர். நபி (ஸல்) அவர்களின் மறைவிற்குப்பின் ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் மிகவும் நலிவடைந்து விட்டனர். நபிகளாரின் ஏக்கத்திலும் கவலையிலும் மக்களை விட்டுவிலகி, மஸ்ஜிதெபகீஃவில் இருந்து கொண்டிருந்தார்கள். இதன் காரணமாகவே அந்த இடத்திற்கு, 'பைத்துல் ஹஜன்' கவலையின் இல்லம் என பெயர் வழங்கி வருகிறது. ஹலரத் பாத்திமா (ரலி) அங்கிருந்து கொண்டு நபி (ஸல்) அவர்களின் மண்ணறையை ஜியாரத்துச் செய்துகொண்டும், அழுதுகொண்டுமிருந்தனர்.

ஒருமுறை நபி (ஸல்) அவர்களின் மண்ணறைச் சென்று கீழ்வரும் கருத்துள்ள கவிதைகளைப் படித்தனர்.

எனக்கு உங்களைப் பற்றிய தேட்டம் அதிகரித்ததால் நான் அழுத நிலையில் உங்கள் மண்ணறையை ஜியாரத்துச் செய்கிறேன.

மேலும் முறையிடுகிறேன். மறுமொழி கொடுப்பார் காணோம்.,

ஓ மண்ணுக்குள்ளிருப்பவர்களே! நீங்கள் எனக்கு அழக்கற்றுக் கொடுங்கள்.

உங்கள் நினைவு எல்லா சோதனைகளையும் மறக்கடிக்கச் செய்துவிட்டது.

நீங்கள் என்னை விட்டும் மண்ணுக்குள் மறைந்துவிட்ட போதிலும் எனது கவலையுற்ற உள்ளத்தை விட்டு நீங்கள் மறைந்து விடவில்லை.

- மதாரிஜுந்நுபுவ்வத்

பாத்திமா (ரலி) அவர்களுக்குத் தங்கள் தந்தை இடம் விரைவாகப் போய் சேர்ந்துவிட வேண்டும் என்னும் பேராவல் மிகுதியாகிக் கொண்டே வந்தது. அவர்களும் நபி (ஸல்)

அவர்களின் மறைவிற்குப்பின் ஆறு மாதங்களே உயிர் வாழ்ந்தனர்.

ஹிஜ்ரீ 11ஆம் ஆண்டு ரமளான் மாதம் மூன்றாம் நாள் செவ்வாய்க்கிழமையன்று மண்ணுலகை நீத்து விண்ணுலகு சென்றார்கள். இன்னாலில்லாஹி-வஇன்னா இலைஹி ராஜிஊன்.

அவர்கள் வஸிய்யத்துச் செய்திருந்தபடி அவர்களை அபூக்கர் சித்தீக் (ரலி)வின் துணைவியார் அஸ்மாஉ பின்த்து உமைஸ் (ரலி) அவர்கள் குளிப்பாட்டினார்கள். ஹஸன் (ரலி)வும், ஹுஸைன் (ரலி)வும் தண்ணீர் கொண்டுவந்து கொடுத்தும் அழுது கொண்டும் இருந்தனர். இன்னும் ஓர் அறிவிப்பின்படி சில நாட்கள் பாத்திமா (ரலி) அவர்கள் நோயுற்றிருந்தார்கள். அன்னையாரின் மரண வேளையில் ஹலரத் அலீ (ரலி) அவர்கள் ஏதோ அலுவல் காரணமாக வெளியே சென்றிருந்தனர். ஹலரத் பாத்திமா (ரலி) அவர்களே, நபி (ஸல்) அவர்களால் உரிமைவிடப்பட்ட அடிமைப்பெண் ஸல்மாவை நோக்கி 'எனக்குத் தண்ணீர் தயார் செய்து வையுங்கள்; நான் குளிக்க வேண்டும்' எனக் கூறினார்கள்.

சல்மா கூறுகின்றார்; 'நான் அவ்வாறே தயார் செய்து வைத்தேன். ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் நல்லமுறையில் தூய்மையாகத் தங்களிடமுள்ள தூய்மையான ஆடையைக் கேட்டு வாங்கி அணிந்துகொண்டனர். பின்னர் படுக்கையை விரிக்கச் சொல்லி அதில் படுத்து முகத்தை கிப்லா பக்கமாக ஆக்கி, வலக்கையை தலைக்குக் கீழ்வைத்து கொண்டு யாஉம்முசல்மா, "நான் இப்பொழுது உலகத்தை விட்டும் செல்கிறேன்; நான் குளித்துக்கொண்டேன். என்னை யாரும் நிர்வாணமாக்க வேண்டாம்" எனக் கூறிவிட்டு இறந்துவிட்டார்கள்.

ஹலரத் அலீ (ரலி) அவர்கள் வந்து எங்களை அழுது கொண்டிருக்கும் நிலையில் கண்டு என்ன செய்தி என்று வினவினர். நடந்தவற்றைக் கூறினேன். அவர்கள் செய்திருந்த அறிவுரைப்படி அந்த குளிப்பைக் கொண்டு நல்லடக்கம் செய்துவிட்டார்கள். ஆனால் இவ்வாறு மரணத்திற்கு பின்னர் குளிப்பாட்டாமல் அடக்கம் செய்வது ஃபிக்ஹ் சட்டத்திற்கு

மாற்றமானதாகும். எனினும் இந்த மஸ்அலா ஹலரத் பாத்திமா (ரலி) அவர்களுக்கு மட்டும் உரியதாகும்.

- ரவ்ளத்தல் அஹ்பாப்

ஹலரத் பாத்திமா (ரலி) வின் இறப்பின்பொழுது 'என் ஜனாஸாவை மக்கள் காண்பதை விட்டும் மறைக்க வேண்டும் எனக்கு வெட்கமாயிருக்கிறது' என்று கூறினார்கள். அதாவது அக்காலத்தில் இன்றைக்கிருப்பது போன்று சந்தூக்கை மூடுவதில்லை. அது சமயம் ஆண்களுடைய ஜனாஸாவைப் போல் பெண்களின் ஜனாஸாவையும் திறந்தே எடுத்துச் செல்வது வழக்கம்.

அப்பொழுது ஹலரத் அஸ்மாஉ பின்த் உமைத் (ரலி) கூறினார்கள். அபீசீனியாவில் ஒருவகையான ஜனாஸா பெட்டிச் செய்கிறார்கள்; அது மறைப்புள்ளதாக இருக்கிறது. நாங்கள் உங்களுக்கும் அது போன்று செய்து தருகிறோம்; என்று சொல்லி ஈத்தம் குச்சிகளால் ஜனாஸா பெட்டிச் செய்தார்கள். ஹலரத் பாத்திமா (ரலி) அவர்கள் அதனைக் கண்டு புன்முறுவல் பூத்தனர்.

- ஜஸ்புல்குலூபி-இலாதியாரில் மஹ்பூபி

ஹலரத் அலீ (ரலி) அவர்கள் 'நபியுடைய மகளே! நபி (ஸல்) அவர்களுக்குப் பின் உங்கள் மூலம் மனத்திற்கு ஆறுதல் பெற்று வந்தேன்; இனி யார் மூலம் ஆறுதலும் தேறுதலும் பெறுவேன்' எனக் கூறி இக்விதைகளைக் கூறினார்கள்.

என் மீது உலகத் துன்பங்களை மிகுதியாகக காண்கிறேன். உலகில் வாழ்பவன் மரணம் வரை நோயாளி போன்றே!

எல்லா இரு தோழர்களுக்கிடையிலும் பிரிவு உண்டு. பிரியாத தோழர்கள் (உலகில்) குறைவே!

நிச்சயமாக நபிகளாருக்குப்பின் பாத்திமா (ரலி) வை இழந்ததே நிச்சயமாக யாதொரு நேசனும் (உலகில்) பிரியாமல் இருப்பதே இல்லை என்பதற்கு ஆதாரமாகும்.

(என் உயிரினும் இனிய நேசத்திற்குரியவராக இருந்த பாத்திமா (ரலி)வை இழந்துவிட்டேன் என்ற கருத்தைக் கவிதை

விளக்குகிறது.)

பின்னர் பாத்திமா (ரலி) வின் ஜனாஸாவை ஹலரத் அலீ (ரலி) அவர்கள் தொழுவைத்தார்கள். அதன் பின்னர் அவர்களை 'ஜன்னத்துல் பகீஃ' என்னும் அடக்கவிடத்தில அடக்கம் செய்தார்கள்.

மறுநாள் ஹலரத் அபூபக்ர் சித்தீக் (ரலி) வும், ஹலரத் உமர் பாரூக் (ரலி) வும் வந்து "ஏன் எங்களுக்குத் தெரிவிக்கவில்லை நாங்களும் ஜனாஸாவில் கலந்து சிறப்பைப் பெற்றிருப்போமே" என்று முறையீடு செய்தனர்.

அதற்கு அலீ (ரலி) அவர்கள், அவர்களின் வஸிய்யத்துப் படி அதாவது நான் இறந்துவிட்டால் அந்நியர்களின் பார்வை என்னுடைய ஜனாஸாவின்மீது விழாதவாறு என்னை இரவிலேயே அடக்கம் செய்து விடுங்கள் எனக் கூறினார்கள் என்பதாக அலீ (ரலி) அவர்கள் பதில் சொன்னார்கள்.

இது இவ்வாறிருக்க ஹலரத் பிலால் (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்களின் மறைவுக்குப் பின்னர், நபிகளாரின் இழப்பினைத் தாங்க முடியாமல் ஷாம் நாட்டிற்குச் சென்றிருந்தனர்.

ஒரு முறை நபி (ஸல்) அவர்கள் ஹலரத் பிலால் (ரலி) அவர்களின் கனவில் திருத்தோற்றமளித்து "யா பிலால் நீர் எமக்கு அநியாயம் செய்து விட்டீர்; நம்மை விட்டும் தொலைவில் ஆகி விட்டீர். நீர் நம்மைச் சந்திக்க வாரும்!" என்று சொன்னதைக் கேட்டு விழித்தெழுந்து ஷாம் நாட்டிலிருந்து புறப்பட்டு மதீனா வந்தனர். அப்பொபது ஹலரத் பாத்திமா (ரலி) வும் மறைந்து விட்டிருந்தார்கள். ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் எவரைச் சந்தித்தாலும் ரசூலுல்லாஹ் (ஸல்) அவர்களின் வீட்டாரைப்பற்றி வினவிக்கொண்டே இருந்தனர். மக்களெல்லாம் ரசூலுல்லாஹ்வின் குடும்பத்தார்களாகிய ஹலரத் அலீ (ரலி) இமாம் ஹஸன் (ரலி), இமாம் ஹுஸைன் (ரலி) மற்றும் 'தூய மனைவியர்' அனைவரும் நலமுடன் இருப்பதாகவே கூறினர்.

பாத்திமா (ரலி)வை மட்டும் எவரும் கூறவில்லை. இறுதியாக

ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் இமாம் ஹஸன் (ரலி) இமாம் ஹுஸைன் (ரலி) ஆகியோரிடம் வந்து அதிகமான கண்ணியம் காட்டியவர்களாக ஹலரத் பாத்திமா (ரலி)வைப் பற்றி வினவினார்கள். அவ்விருவரும் அழத் தொடங்கினார்கள். பின்னர் அன்னை பாத்திமா (ரலி) அவர்கள் இறந்துவிட்ட செய்தியைக் கூறினார்கள். இதனைச் செவியுற்ற ஹலரத் பிலால் (ரலி) அவர்கள் மிகவும் அழுதனர். மேலும் அல்லாஹ்வின் ரசூலுடைய ஈரல்குலைத் துண்டே! தாங்கள் எவ்வளவு விரைவாகத் தங்கள் தந்தையாரிடம் சேர்ந்து விட்டீர்கள்!" எனக் கூறினார்கள். அன்னையவர்கள் மறைந்தபொழுது அவர்களின் வயது இருபத்தெட்டு.

- ரவ்ளத்துல் அஹ்பாப்

## 30. ஹலரத் பாத்திமா (ரலி)வின் பிள்ளைகள்

அன்னை பாத்திமா (ரலி) அவர்களுக்கு ஹஸன் (ரலி) ஹுஸைன் (ரலி) முஹ்ஸின் (ரலி) என்னும் ஆண் மக்கள் மூவர்.

ஜைனப் (ரலி) உம்முகுல்தூம் (ரலி) ருகய்யா (ரலி) என்னும் பெயரில் பெண் மக்கள் மூவர் இருந்தனர். அவர்களுள் முஹ்ஸின் (ரலி)வும் ருகய்யா (ரலி)வும் சிறு குழந்தையாக இருந்தபொழுதே இறந்துவிட்டனர்.

ஜைனப் (ரலி) அவர்களை அப்துல்லாஹ் இப்னு ஜஃபர் (ரலி) வுக்கும் உம்மு குல்தூம் (ரலி)வை ஹலரத் உமர் இப்னு கத்தாப் (ரலி) வுக்கும் திருமணம் செய்து கொடுக்கப்பட்டது.

### ஹலரத் இமாம் ஹஸன் (ரலி)

இமாம் ஹஸன் (ரலி) அவர்களுக்குப் பன்னிரெண்டு பிள்ளைகள் பிறந்தன. அவர்களுள் அஹ்மது, உகைல், அப்துல்லாஹ், ஜஃபர், உமர், ஹுஸைன், ஜைது, ஹஸல் முஸன்னா-இஸ்மாயீல் அப்துற்றஹ்மான், காசிம், அப்துல்லாஹ் எனப்பதினோறு ஆண் மக்களும் பாத்திமா என்று ஒரு பெண் பிள்ளையும் இருந்தனர்.

### ஹலரத் இமாம் ஹுஸைன் (ரலி)

ஹலரத் ஹுஸைன் (ரலி) அவர்களுக்கு மொத்தம் ஆறு பிள்ளைகள், அவர்களுள் அலீ அக்பர், அலீ அஸ்கர், ஜைனுல் ஆபிதீன், ஜஃபர், அப்துல்லாஹ் என்று நான்கு ஆண்களும், பாத்திமா, சகீனா என்ற இரு பெண்மக்களும் இருந்தனர்.

### ஜைனப் பின்த் பாத்திமா

ஹலரத் பாத்திமா (ரலி)வின் மகள் ஜைனப் அவர்கட்கு ஐந்து பிள்ளைகள் இருந்தனர். அவர்களுள் அலீ அவ்ன், அப்பாஸ், முஹம்மது என்னும் நான்கு ஆண் மக்களும் உம்முகுல்தூம் எனும் பெயரில் ஒரு பிள்ளையும் ஆவர்.

### உம்முகுல்தூம் பின்த் பாத்திமா (ரலி)

ஹலரத் உம்முகுல்தூம் (ரலி) வுக்கு ஜைது என்னும் பெயரில் ஓர் ஆணும், ருகைய்யா எனும் பெயரில் ஒரு பெண் பிள்ளையும் இருந்தனர்.

### ஹலரத் அலீ (ரலி)யின் பிள்ளைகள்

ஹலரத் பாத்திமா (ரலி)வின் மூலம் மூன்று ஆண்மக்களும் மூன்று பெண்மக்களும் தவிர ஹலரத் அலீ (ரலி) அவர்களுக்கு வேறு மனைவியர் மூலம், அடிமைகள் மூலம் முஹம்மதிப்னு ஹனீபா, அப்துல்லாஹ், அபூபக்கர், அப்பாஸ், அக்பர், உஸ்மான், ஜஃபர், அப்துல்லாஹ் இப்னு, கிலாபிய்யா, முஹம்மது அஸ்கர், யஹ்யா, அவ்ன், உமர் அக்பர், முஹம்மது அவ்ஃத் என்னும் பெயர்களில் பன்னிரெண்டு ஆண்மக்களும் உம்முல் ஹஸன், ரம்லத்துல் குப்ரா, உம்முஹானி, மைமூனா, ரம்ளத் ஸுக்ரா, ஜைனபுஸ்ஸுக்ரா, உம்முகுல்தூமுஸ்ஸுக்ரா, உம்மு ஜஃபர் தகிய்யா என்று பதினைந்து பெண் பிள்ளைகளும் இருந்தனர்.

